(5) COMMITTEE ON SUBORDINATE LEGISLATION.

SRI K. VINAYAKAM : Mr. Deputy Speaker, Sir, I, as the Chairman of the Committee on the Subordinate Legislation, beg to present the Thirteenth Report (Second Assembly) of the Committee.

## VIII.—THE MADRAS STATE ELECTRICITY BOARD BUDGET, 1961–62

THE HON. SRI V. RAMAIAH : Mr. Deputy Speaker, Sir, I beg to move—

'That the Annual Financial Statement for 1961–62 and the Supplementary Financial Statement for 1960–61 of the Madras State Electricity Board laid on the table of the House be taken up for discussion'.

இந்த இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிந்த பிறகு, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் முதல் வருஷமாக இருக்கக்கூடிய இந்த நேரத்தில், மின்சாரக் குழு செய்துகொண்டிருக்கக்கூடிய பல்வேறு திட்டங்களை விளக்கமாகச் சொல்லக்கூடிய முறையிலே ஒரு விரிவான அறிக்கையைத் தயார் செய்து கனம் அங்கத்தினர்களுக்கு இரண்டு தினங்களுக்கு முன்கூட்டியே கொடுத்திருக்கிறேன். இந்த அறிக்கையைக் கவனித்துப் பார்த்தால் நமது மாநிலத்திலே மின்சார வளர்ச்சி எத்தனை வேகமாக ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது என்பதை நாம் நன்றாகப் புரிந்து கொள்ள முடியும். குறிப்பாக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவடைந்த நேரத்திலே மின்சாரத் தேவையைப் பொறுத்த வரையிலே, விவசாயத் துறையை எடுத்துக் கொண்டாலும் சரி, சிறு தொழில்களை நடத்தக்கூடியவர்களை எடுத்துக் கொண்டாலும் சரி, அல்லது பெரிய தொழிற்சாலைகளை ஏற்படுத்தியிருக்கக்கூடியவர்களுடைய தேவையை எடுத்துக் கொண்டாலும் சரி, அது வளர்ந்து கொண்டே இருக்கிறது. இந்த வளர்ச்சியைப் பரிபூரணமாக உணர்ந்து இருக்கக்கூடிய காரணத்தினால் தேவையைப் பூர்த்தி செய்யக்கூடிய முறையிலே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே மின்சார சக்தியின் உற்பத்திக்கு மிக முக்கியமாக இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலே ஏறத்தாழ 100.19 கோடி ரூபாய் வரைக்கும் செலவு செய்ய வேண்டும் என்று நாம் முடிவு செய்திருக்கிறோம். ஆனால் இப்பொழுது இந்த மாநிலத்திலே ஏற்பட்டிருக்கக்கூடிய தேவையை நாம் முறையாகப் பார்த்தோமானால், இப்பொழுது நாம் மேற்கொண்டு இருக்கக்கூடிய திட்டங்கள் கூட நமது தேவையை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் முடியக்கூடிய நேரத்தில் பூர்த்தி செய்யாது போகுமோ என்ற ஒரு நிலைமை ஏற்படுகிறது. அதுபற்றி விவரமாக எவ்வளவு பற்றாக்குறை இருக்கும் என்பதை இந்த அறிக்கையிலே எடுத்துக் காட்டியிருக்கிறேன்.

18th August 1961] [Sri V. Ramaiah]

நான் ஆரம்பத்தில் குறிப்பிட்டதுபோல எல்லா துறைகளிலும் மின்சாரத் தேவை அதிகமாக வளர்ந்துகொண்டிருக்கிறது. குறிப்பாக இந்த மாநிலத்தைப் பொறுத்தவரையிலே, பல மாகாணத்தைச் சேர்ந்தவர்களும், வெளி நாட்டிலிருந்து வரக்கூடியவர்களும் கிராம மின்சாரத் திட்டத்திற்கு அதிகமாகப் பாராட்டுதலே தெரிவிக்கிறார்கள். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடியக்கூடிய நேரத்திலே 11,000 கிராமங்கள் வரைக்கும் மின்சாரம் கொடுத்திருக்கிறோம். கிராம ரீதியாகப் பார்க்கும்பொழுது மின்சாரம் நல்ல முறையிலே பயன்பட்டு வருகிறது. கிராமங்களுக்கு மின்சார விஸ்தரிப்பை நாம் அதி தீவிரமாக ஏற்படுத்தவேண்டும் என்று ஆசைப்படுவதற்கு முக்கியமான காரணம், கிராமத்திலே இருக்கக் கூடியவர்கள் விவசாயத்தைப் பெரிய அளவிற்கு ஊக்கத்தோடு செய்வதற்கு மின்சார சக்தி பயன்பட்டு வருகிறது. குறிப்பாக வட ஆற்காடு மாவட்டத்தை எடுத்துக் கொண்டால் மின்சாரம் எந்த அளவிற்கு விவசாயிகளுடைய நினைப்பை வளர்த்திருக்கிறது, அவர்களிடையே எவ்வளவு உற்சாகம் ஏற்பட்டிருக்கிறது என்பதைப் பார்க்கும்பொழுது உண்மையிலேயே நான் பெரிதும் சந்தோஷம் அடைகிறேன். இந்த மாவட்டத்தைப் பொறுத்தமட்டும் அல்ல இந்த நிலை. எந்த ஒரு மாவட்டத்தை எடுத்துக்கொண்டாலும், எந்த ஒரு பகுதியை எடுத்துக் கொண்டாலும் தங்களுடைய பகுதிக்கு மினசாரம் வந்துவிட்டால் அந்தப் பகுதியில் வளர்ச்சியை பார்க்க முடியும் என்று நிச்சயமாக அங்கு இருக்கக்கூடிய விவசாயிகள் கருதுவதைப் பார்க்கும்போது நான் எனக்குப் பெரும் மகிழ்ச்சி உண்டாகிறது.

கிராமங்களுக்கு மின்சாரம் கொடுப்பது ஒரு பெரிய கடுமையான வேலை. குறிப்பாக தொழில் வளர்ச்சியை அதிகமாக ஏற்படுத்தி இருக்கக்கூடிய நேரத்திலே நமக்கு கிடைக்கக்கூடிய மின்சார சக்தியை பெரிய தொழிற்சாலைகளுக்கே கொடுத்துவிடலாம். அப்படிக் கொடுத்தால் கூட பரிபூரணமாக எல்லாத் தொழிற்சாலைகளுக்கும் மின்சாரம் கொடுக்க முடியாத கட்டத்தில் நாம் இருக்கிறோம். அப்படி இருக்கக்கூடிய நேரத்திலே கிராமப் புரத்தில் மின்சார விஸ்தரிப்புத் திட்டத்தை நாம் தீவிரமாக ஏற்றுக்கொண்டிருப்பதற்குக் காரணம் வெறுமனே மின்சாரத்தை அங்கு கொடுத்து அதனால் மக்களிடத்திலே ஒரு சிறு மகிழ்ச்சியை ஏற்படுத்திவிடலாம் என்ற நினைப்பில் அல்ல. 5, 6 வருஷமாக தொடர்ந்து மின்சார விஸ்தரிப்பு ஏற்பட்டிருக்கக்கூடிய நிலையை கிராமப்புறத்திலே பார்ப்போமானால், கிராம மக்களுடைய நினைப்பிலே ஒரு பெரிய திருப்பம் ஏற்பட்டிருக்கிறது என்று சொன்னால், அது மிகையாகாது. அவர்கள் வாழ்வில் புதிய நினைப்பு ஏற்படுவதோடுகூட, அவர்கள் எத்தனையோ புது முயற்சிகளை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். மின்சாரம் வந்துவிட்டால் நிரந்தரமாக நல்ல விவசாயம் செய்ய முடியும் என்ற நினைப்பு விவசாயிகளிடையே ஏற்பட்டு இருக்கிறது. மின்சார விஸ்தரிப்பு ஏற்பட்டிருக்கக்கூடிய பகுதிகளிலே அதிலும் குறிப்பாக வட ஆற்காடு மாவட்டம், ராமனாதபுரம் ஜில்லாவில் ஒரு சில பகுதிகள், திருநெல்வேலி

[Sri V. Ramaiah] [18th August 1961

ஜில்லாவில் ஒரு பெரும் பகுதி, சேலம், கோயம்புத்தூர் இது போன்ற ஜில்லாக்களில், மக்களே முன்வந்து புதுப் புது ஆலோசனைக் கூறுகிறார்கள். அங்கு இருக்கக்கூடிய விவசாயிகளுக்கு மின்சார சக்தியை மேலும் நல்ல முறையில் பயன்படுத்தி ஏன் கிராமங்களில் சிறு தொழில்களை ஆரம்பிக்கக் கூடாது என்ற நினைப்பு ஏற்பட்டிருக்கிறது. குறிப்பாக நம் மாநிலத்தில் மின்சாரத்தைப் பற்றி ஒரு புது நினைப்பு ஏற்பட்டிருப்பது பெரிய லாபம் என்று கருதுகிறேன். கிராம விவசாயிகளிடையே தொழில் செய்யவேண்டும் என்ற ஆர்வம் வளர்ந்துவிட்டால், நாம் தொழில் துறையில், அதுவும் குறிப்பாக சிறு தொழில்கள் மூலமாக இந்த மாநிலத்தில் பெரிய முன்னேற்றத்தைப் பார்க்க முடியும் என்று நான் நினைக்கிறேன். இந்த நினைப்பை வருகிற மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் அதிகமாகக் கவனிக்கவேண்டும் என்பது என்னுடைய ஆசை.

கிராமப்புறங்களிலே நாம் மின்சாரத்தை விஸ்தரித்திருப்பது எந்த முறையிலே பயன்படுத்தப்பட்டு வருகிறது, அது சரியான முறையிலே, லாபம் தரக்கூடிய முறையிலே பயன்படுத்தப்பட்டு வருகிறதா என்பதைப் பரிசிலனை செய்ய நிபுணர்கள் அடங்கிய ஒரு குழு ஏற்படுத்தப்பட்டது. மின்சார விஸ்தரிப்பை எப்படி விவசாயிகள் பயன்படுத்திக்கொண்டிருக்கிறார்கள் என்பதை ஆராய்ந்து பார்த்து ஒரு விரிவான அறிக்கையைக் கொடுத்திருக்கிறார்கள். குறிப்பாக இந்த மாநிலத்தில் பொருளாதார முன்னேற்றத்தைக் காணவேண்டும் என்று துடிதுடித்துக்கொண்டிருக்கிற இந்த நேரத்தில், கிராமப்புறத்தில் செய்யக்கூடிய பல்வேறு ஆக்க வேலைகளை எப்படி ஒன்றாக இணைத்து, மின்சார சக்தியை அதில் பயன்படுத்திக் கொள்ள முடியும் என்பதைப் பார்க்க இந்தக் குழு முயற்சி எடுத்திருக்கிறது. இந்தக் குழுவின் அறிக்கை அரசாங்கத்தின் பரிசிலனையில் இருக்கிறது. அந்தக் குழுவில் அங்கம் வகித்தவர்கள் தொழில் இலாகா டைரக்டர், கூட்டுறவு இலாகா ரிஜிஸ்டிரார், இன்னும் இதுபோன்ற ஆக்க வேலைகளில் ஈடுபட்டிருக்கக்கூடியவர்கள் தான். அவர்கள் ஒரு விரிவான அறிக்கையைக் கொடுத்திருப்பது பற்றி கூட நான் என்னுடைய அறிக்கையிலே குறிப்பிட்டிருக்கிறேன். இந்தக் குழுவை நாம் ஏற்படுத்தியதற்குக் காரணம், கிராமப்புறத்தில் இருக்கக்கூடிய மக்களுடைய வாழ்க்கையிலே உயர்வு காணவேண்டும் என்பது தான். பல்வேறு சக்திகளையும் ஒன்றாக இணைத்து ஒருமுகப்படுத்தி நாம் முயற்சி செய்யும் பட்சத்தில் கிராமங்களில் பெரிய மாறுதலைப் பார்க்கலாம் என்று தான் நிச்சயமாக நம்புகிறேன். குறிப்பாக கிராம மக்களை பார்த்து வரக்கூடிய எனக்கு, கிராம மக்களுடைய புது ஆர்வத்தைப் பார்க்கும்பொழுது நான் முன்பு சொன்னது போல சந்தோஷம் அடைகிறேன். சிறு தொழில்கள் அதிகமாக ஏற்படுத்தப்பட வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். நம் முன்னேற்றத்தைப் பொறுத்தவரையிலே நமக்கு அதிகமாக சிறு தொழில்கள் மீது நம்பிக்கை ஏற்பட வேண்டும். அதற்குத் தகுந்த முறையிலே நாம் சிறு தொழில்களை

18th August 1961] [Sri V. Ramaiah]

வளர்க்க மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலே பெரும் இடம் கொடுத்துக் கொண்டிருக்கிறோம். இந்தச் சிறு தொழில்களைக் குவியலாக, தொழில் பேட்டைகள் மூலமாக பெரிய நகரங்களுக்குப் பக்கத்திலே அமைத்துவிடுவது லாபமா, அல்லது அதிலிருந்து இன்னும் ஒரு படி மேல் சென்று, தொழில் பேட்டைகளுக்குப் பதிலாக ஏன் ஒவ்வொரு கிராமத்திலும், ஒரு சிறு தொழில் வைக்கக் கூடாது, அதற்குத் தகுந்த முறையில் நிபுணர்கள் ஆலோசனை, மின்சார வசதி முதலியவைகளை ஏன் ஏற்படுத்திக் கொடுக்கக் கூடாது என்பது பற்றி யோசிக்க வேண்டும் என்பது என்னுடைய ஆசை.

உதாரணமாக தஞ்சை ஜில்லாவை எடுத்துக் கொள்வோம். கும்பகோணத்தில் ஆரம்பமாகி தஞ்சை வந்து அடையக் கூடிய நேரத்தில், அங்கு கிராமங்கள் நெருங்கியிருக்கும் தொடர்பு எப்படியிருக்கிறதென்றால், எந்த இடத்தில் ஒரு கிராமம் ஆரம்பமாகிறது. எந்த இடத்தில் அது முடிகிறது என்று தெரிவது கஷ்டமாக இருக்கிறது. அப்படி, கிராமம் ஒன்றோடொன்று இணைந்திருக்கிறது. ஆகையால், எல்லாத் தொழில்களையும் குவியலாக ஒரே இடத்தில் வைப்பதற்குப் பதிலாக, நமது நாட்டுக்குத் தகுந்த முறையில், நமது நாட்டில் இருக்கும் கிராம அபிவிருத்திக்குத தகுந்த முறையில் ஏன் எல்லா கிராமங்களிலும் தொழில்களை அமைத்து, அங்கே உற்பத்தி செய்யக்கூடிய பொருள்களுக்குத் நாம் ஆதரவு கொடுக்கக்கூடாது என்ற புது நினைப்பையும் நாம் பரிசீலனை செய்து பார்க்கவேண்டுமென்ற முறையில் இந்தக் குழுவை அமைத்திருக்கிறோம். அந்தக் குழுவினர் அறிக்கை கொடுத்திருக்கிருர்கள். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இதற்கு முக்கியமான இடம் கொடுக்கவேண்டுமென்பது என்னுடைய ஆசை.

அதோடு இல்லாமல், இன்னொரு முக்கியமான பிரச்னையையும் இந்தச் சபை ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ளவேண்டுமென்பது என் ஆசை. அதாவது, கிராம மின்சார விஸ்தரிப்புத் திட்டங்கள். நமது மாநிலத்தைப் பொறுத்தவரையில், கிராம மின்சார விஸ்தரிப்புத் திட்டம் நல்ல முறையில் நடந்துகொண்டிருப்பதை எல்லோரும் பார்த்துப் பாராட்டுகிருர்கள். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் முடியக் கூடிய நேரத்தில் எல்லாக் கிராமங்களுக்கும் மின்சாரம் கொடுத்துவிடவேண்டுமென்று ஆசைப்படுகிறோம். அது நம்முடைய லட்சியம். எல்லாக் கிராமங்களுக்கும் மின்சாரம் கொடுத்துவிடுவதோடு நின்றுவிடவேண்டுமென்பது அல்ல என்னுடைய எண்ணம். எல்லாக் கிராமங்களுக்கும் மின்சாரம் கொடுக்கும் அதே நேரத்தில் கிராமத்திலிருக்கும் எல்லா விவசாயிகளுக்கும் மின்சாரம் கொடுக்க வேண்டும் என்பதும் முக்கியம்.

இப்பொழுது இருக்கும் விஸ்தரிப்பு முறைப்படி கிராமங்களில் யார் யாருக்கு அதிகமாக வசதி இருக்கிறதோ, அவர்களுக்கு எல்லாம் மின்சாரம் கிடைத்திருக்கும். ஆனல், கிராமத்திலிருக்கும்

[Sri V. Ramaiah] [18th August 1961

நடுத்தர, சிறு விவசாயிகளுக்கு அந்த மின்சார சக்தி அதிகமாகப் பயன்படவில்லை. அதற்குக் காரணம் இன்றைக்கு இருக்கும் மின் சார விஸ்தரிப்பு முறையாகும். இன்றைக்கிருக்கும் மின்சார விஸ்தரிப்புக்கான கொள்கை அடிப்படையைப் பார்த்தால், ஒவ் வொரு திட்டத்தையும் நாம் முடிவு செய்யக்கூடிய நோக்கில் அந்தத் திட்டம் கட்டுபடியாகக் கூடிய திட்டமாக இருக்க வேண்டும். அதற்காக மின்சாரத்தைப் பயன்படுத்தக்கூடிய விவ சாயிகள் விசேஷ உத்தரவாதங்களுடன் நமக்கு ஒப்பந்தம் செய்து கொடுக்க வேண்டும். அதே முறையில் பார்த்தால், மின்சார விஸ் தரிப்பானது வருகிற வருஷங்களில் அவ்வளவு துரிதமாக இருக் காது. காரணம், முதல் ஐந்தாண்டுத் திட்டம், இரண்டாவது ஐந் தாண்டுத் திட்டக் காலத்தில், எங்கெங்கே இந்த உத்தரவாதத்திற்கு இணங்கி விவசாயிகள் ஒப்பந்தம் செய்து கொடுக்க முன்வந்தார் களோ அந்த கிராமங்களுக்குத் தான் மின்சாரம் கொடுத்தோம். ஆனல், வரக்கூடிய வருஷங்களில் இது சற்று சிரமமாக இருக்கும்

அதோடு இல்லாமல், விஸ்தரிப்பு செய்யப்பட்டிருக்கும் கிராமங் களுக்கும் இப்பொழுது தேவை அதிகமாகப் போய்க் கொண்டிருக் கிறது. அங்கிருக்கும் நடுத்தர, சிறு விவசாயிகள், மின்சார சக்தி யினல் அங்குள்ள பெரும் விவசாயிகள் அடையக்கூடிய லாபத்தைப் பார்த்தவுடனே, தாங்களும் அதுபோல் விவசாயம் செய்ய வேண்டும் என்ற பெரும் ஆர்வம் கொண்டிருக்கிருர்கள். ஆகையால் கிராம மின்சார விஸ்தரிப்புத் திட்டத்தைப் பொறுத்த வரையில், வெறுமனே மீதமிருக்கும் எண்ணுயிரம், ஒன்பதாயிரம் கிராமங் களுக்கும் மின்சாரம் கொடுத்துவிட்டால் மட்டும் போதாது; கூடிய விரைவில் மின்சார சக்தி ஒவ்வொரு விவசாயிக்கும் கிடைக்கக் கூடிய புதிய வழியைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன். சென்ற வருஷம் நான் கொடுத்த புள்ளி விவரத் தில் நமது மாநிலத்தில் இருக்கக்கூடிய மொத்தக் கிணறுகள் ஏறத்தாழ 8 லட்சம் என்று சுட்டிக் காட்டியிருந்தேன். ஆனல், நமது மாநிலத்தில் மின்சார சக்தி கிடைத்திருக்கக் கூடிய கிணறு கள் ஒரு லட்சத்துப் பதினையிரம்—இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடியும் நேரத்தில். மீதமிருக்கும் கிணறுகள் அத்தனைக் கும் துரிதமாக மின்சாரம் கொடுத்து, மாநிலத்தில் விவசாயத் துறையில் ஈடுபட்டிருக்கும் மக்களெல்லோருக்கும் பெரும் லாபத்தை ஏற்படுத்திக் கொடுக்கலாம் என்ற நினைப்பிலே தான் இந்தப் பெரும் திட்டத்தை அணுக வேண்டுமென்று ஆசைப்படு கிறேன்.

அரசாங்கமோ அல்லது அரசாங்கப் பணியைப் புரிந்து கொண்டிருக்கும் ஸ்தாபனங்களோ, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடியக் கூடிய காலத்தில் 11,000 கிராமங்களுக்கு மின் சாரம் கொடுத்ததுபோக, மீதமிருக்கும் கிராமங்களுக்கு மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் கொடுத்து விடும், ஆகையால் பிரச்னை தீர்ந்துவிட்டது என்று யாரும் அந்த முடி வுக்கு வந்துவிடக் கூடாது. ஏனென்ருல் மேலும் மேலும்

18th August 1961] [Sri V. Ramaiah]

மின்சாரத் தேவை அதிகமாகப் போய்க் கொண்டிருக்கிறது. எல்லாக் கிராமங்களுக்கும் மின்சாரம் கொடுக்க வேண்டும். அதே நேரத்தில் எல்லா விவசாயிகளுக்கும் மின்சாரம் கிடைக்க வேண்டும். அந்த முறையிலே தான் மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தை அணுகவேண்டும். அப்படிப் பார்க்கும்போது, மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்திற்குள்ளே நமது தேவை பெரும் அளவு அதிகமாகப் போய்க்கொண்டிருக்கும்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடியக் கூடிய நேரத்தில் நமது திட்டத்தை முடிக்க ரூ. 79.92 கோடி செலவு செய்திருக்கிறோம். இதே அடிப்படையில் மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் ரூ. 100.19 கோடி செலவு செய்ய இருக்கிறோம் என்பதைப் பார்க்கும்போது, அது மிகவும் கணிசமான முன்னேற்றமாகத்தான் இருக்கும். ஆனால், நம்முடைய தேவை முழுவதையும் பூர்த்திசெய்ய வேண்டுமென்றால், அதற்கு இன்னும் அதிகமாகச் செலவு செய்தாகவேண்டும். அந்த அடிப்படையில் தான் நாம் இந்தப் பிரச்னையை அணுகக் கூடிய காரணத்தால், நாம் மூன்று அல்லது நான்கு வருஷங்களுக்கு முன்பாகவே இந்தப் பிரச்னையை உணர்ந்து, நமது மாநிலத்தில் அடாமிக் பவர் ஸ்டேஷன் ஒன்றை நிறுவவேண்டும் என்றோம். இப்பொழுது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை முடித்து, மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தின் வளர்ச்சிகளையும், தேவைகளையும் பார்க்கும்போது, அடாமிக் பவர் ஸ்டேஷன் அவசியமாக ஏற்பட்டாக வேண்டுமென்ற ஒரு நிலை ஏற்பட்டிருக்கிறது.

இந்த முறையிலே இந்த வருஷ நிதி நிலை அறிக்கையைப் பரிசீலனை செய்கின்றபோது, நாம் செய்திருக்கும் பல்வேறு திட்டங்களையும், எடுத்துக் கொண்ட முயற்சியையும் பார்ப்பதோடு, வரக் கூடிய வருஷங்களில் விவசாயிகளுடைய பிரச்னை, சிறு தொழில்களில் ஈடுபட்டிருக்கக்கூடிய மக்களுடைய பிரச்னை, பெரும் தொழில்களை நடத்தக்கூடியவர்களுடைய தேவை, இவற்றையெல்லாம் மனதில் வைத்து, நல்ல கருத்துக்களை கனம் அங்கத்தினர்கள் சொல்ல வேண்டுமென்று கேடுக் கொள்கின்றேன். கனம் அங்கத்தினர்களுடைய பார்வைக்குக் கொண்டுவந்திருக்கக்கூடிய அறிக்கையில் கண்டிருக்கக்கூடிய பல விஷயங்களின் மீது கனம் அங்கத்தினர்கள் மனதில் ஓடக்கூடிய பல கருத்துக்களையும் சொல்லி, மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தை நல்ல முறையில் நிறைவேற்றுவதற்கு உதவவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன். (ஸ்ரீ. எம். கல்யாணசுந்தரம்: இது மின்சார போர்டு பட்ஜெட் என்று நினைக்கிறேன்). இது மின்சார போர்டு பட்ஜெட் என்றாலும், மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டம் நல்ல விதமாக அமைவதற்கு மின்சாரம் அடிப்படையாக இருக்கிறது என்று நான் கருதுகிறேன். ஆகையால், நான் தவறுதலாகச் சொல்லிவிடவில்லை. ஆகவே, கனம் அங்கத்தினர்கள் தயவு செய்து நல்ல கருத்துக்களைச் சொல்லவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கின்றேன்.

[18th August 1961

9-30 a.m. **Sri V. K. KOTHANDARAMAN:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நமக்கு முன்னால் சமர்ப்பிக்கப்பட்டு இருக்கக்கூடிய மின்சார போர்டு வரவுசெலவுக் கணக்கைப்பற்றியும், கனம் அமைச்சர் அவர்கள் வைத்திருக்கக்கூடிய "ஐந்தாண்டுத் திட்டங்களின் கீழ் தமிழ்நாட்டில் மின்சார அபிவிருத்தி" என்பது சம்பந்தப்பட்ட பிரச்னைகள் பற்றியும், அதற்குமேல் அவர் இப்போது கொடுத்திருக்கக்கூடிய விளக்கத்தின் அடிப்படையில் முழுக்க முழுக்க அதை வரவேற்பதற்கு முடியாத ஒரு நிலைமை இருக்கிறது. இருந்தாலும் அவரை உற்சாகம் குன்ற அடிக்கக் கூடிய அளவுக்கு விடுவதற்குப் பதிலாக ஓரளவுக்கு அதை வரவேற்றுப் பாராட்டிப் பேசுகின்றேன். அதோடு இதில் இருக்கக் கூடிய குறைகளையும் அவர்களுக்கு எடுத்துக் காட்ட ஆசைப் படுகிறேன்.

இந்த ஆண்டு ரிப்போர்ட்டிலே சுதந்திரம் அடைவதற்கு முன்னால் தமிழ்நாட்டிலே முதன்முதலாக மின்சாரம் 1908-ம் ஆண்டிலே ஆரம்பிக்கப்பட்டது. அதிலும் நீலகிரி ஜில்லாவில் காட்டேரியில் ஆரம்பிக்கப்பட்டது முதற்கொண்டு இதுவரையில் எந்த அளவுக்கு அபிவிருத்தி ஏற்பட்டுள்ளது, எந்த அளவுக்கு மின்சார சக்தியை பலப்படுத்தியிருக்கிறோம் என்பதைப் பற்றியும் இந்த ரிப்போர்ட்டில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த அளவுக்கு முன்னேற்றம் இருந்தும் கூட இந்தியாவிலே நான்காவது ஸ்தானத்திலே இருக்கக்கூடிய நிலைமைதான் நமக்கு இருக்கிறது என்பதை நாம் பார்க்கிறோம். ஆசியாவிலேயே முன்னணியில் இருக்கிறோம். 25 சத விகிதம் நம் விவசாயிகளுக்கு மின்சார சக்தியைக் கொடுக்கின்றோம் என்று சொல்லப்பட்டபோதிலும்கூட நமக்கு முன்னணியில் இருக்கக்கூடிய ராஜ்ய மின்சார உற்பத்தியிலே அவர்கள் கொடுக்கக்கூடிய சதவிகிதத்தை, நமது தமிழ்நாட்டிலே உற்பத்தி செய்யக்கூடிய—கொடுக்கக் கூடிய சதவிகிதத்தை—ஆகிய எல்லாவற்றையும் வைத்துப் பார்க்கிற நேரத்தில் அது எந்த அளவுக்கு அதைவிடக் கூடுதலாக இருக்க முடியும் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் விளக்கினால் அது மிகவும் உதவிகரமாக இருக்கும் என்பதை இந்த நேரத்தில் சொல்லிக் கொள்ள ஆசைப் படுகிறேன்.

முதல், இரண்டாவது திட்டகாலத்தில் மின்சார உற்பத்தியை நாம் எந்த அளவு அதிகரித்திருக்கிறோம் என்று சொல்லிவிட்டு, மூன்றாவது திட்டகாலத்தில் நமக்கு ஏற்படும் மின்சார சப்ளை நெருக்கடியைத் தவிர்ப்பதற்காக, மூன்றாம் திட்ட காலத்தில் தமிழ் நாட்டில் அணுசக்தி மின்சார நிலையம் ஒன்றை ஏற்படுத்த வேண்டும் என்று தமிழ்நாடு அரசாங்கம், இந்திய அரசாங்கத்தையும், திட்டக் கமிஷனையும் வற்புறுத்தி வருகின்றது என்றும், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் தமிழ்நாட்டில் பொதுத் துறையில் மின்சார திட்டங்களுக்கான மூலதனச் செலவை மேற்கொண்டு அதிகரிக்கத் திட்டக் கமிஷன் இணங்காமற் போகலாம் என்றும், இத்தகைய நிலைமையில் மாநிலத்தின்

18th August 1961] [Sri V. K. Kothandaraman]

மின்சார வசதிகளைப் பெருக்கிக் கொள்வதற்காக, தனியார் துறையில் அனல் மின்சார நிலையங்களை ஏற்படுத்தலாம் என்ற யோசனையை அரசாங்கம் ஆராய்ந்து வருகிறது என்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள். இதை நன்றாகப் பார்க்க வேண்டும். இவர்கள் மத்திய சர்க்காரிடத்தில் வற்புறுத்தியதை அவர்கள் ஒப்புக் கொண்டார்களா, நிராகரித்தார்களா என்பதைத் திட்டவட்டமாகச் சொல்லவில்லை. அப்படிச் சொல்வதற்குப் பதிலாக நாங்கள் முயற்சி செய்திருக்கிறோம், கேட்டிருக்கிறோம், வலியுறுத்தியிருக்கிறோம். இருந்தபோதிலும் மூலதனச் செலவை அதிகரிக்க இணங்காமற் போகலாம், என்று இப்படிச் சொல்லி விட்டுத் தனியார் துறையில் ஆரம்பிப்பதற்கும், தனியார் துறையில் மின்சாரத்தை உற்பத்தி செய்வதற்கும் வழிசெய்யப்போகும் எண்ணத்தை மேலாகச் சொல்லியிருக்கிறார்கள். சர்க்கார் துறையில் ஆரம்பிக்கப்போவதில்லை என்பதைச் சொல்லவில்லை. மத்திய சர்க்கார் நம்மைக் கைவிட்டுவிட்டார்கள், தனியார் துறையில் ஆரம்பிக்கப்போகிறோம் என்று சொல்லாமல் சொல்லி யிருக்கிறார்கள். இதை முதலாளிகள் வரவேற்கிறார்கள் என்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

அணு மின்சார நிலையத்தை ஆரம்பிக்கவேண்டுமானால் அதற்கான தேவைப்பொருள் தென்னாட்டில் தான் மிக அதிகமாகக் கிடைக்கிறது. மிக என்பதைவிட தென்னாட்டில்தான் கிடைக் கிறது என்று சொல்லலாம். அந்த அளவுக்கு இங்கே கிடைக்கிற மூலப்பொருளை அந்நியனுக்கு விற்பனை செய்துவிட்டு நமக்கு மின்சாரம் இல்லையென்று நாம் கைபேந்தி நிற்பதைவிட அணு சக்தி மின் உற்பத்தி நிலையத்தை தென்னாட்டிலேயே ஏன் ஆரம் பிக்கக் கூடாது? இங்கே ஆரம்பிப்பதற்கு மத்திய சர்க்காரை எதிர்த்துப் போராட ஆக்கபூர்வமான சகலவிதமான நடவடிக்கை களையும் ஏன் எடுக்கக் கூடாது? அதைவிட்டு தனியார் துறையில் ஆரம்பிக்க உத்தேசித்திருக்கிறோம் என்று சொல்வது இந்தச் சர்க்கார் சுதந்திரா கட்சியைப் பார்த்து பயந்து கொண்டுதான் இந்தமாதிரி போக்கிலே இறங்குகிறார்களோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது என்பதை நான் சொல்லிக் கொள்கிறேன். ஆகவே இன்றையதினம் சுதந்திராக் கட்சியை திருப்திபடுத்து வதற்காக அல்லது சுதந்திரா கட்சி தனியார் சுதந்திரத்திற்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்று சொல்கிற கொள் கையை மறைமுகமாக ஒப்புக்கொண்டு அவர்கள் இன்றையதினம் எழுப்புகிற கூக்குரலுக்கு இணங்க இதுபோன்ற நடவடிக்கை எடுக்க முன்வந்திருக்கிறார்களோ என்று ஐயுறுகிறேன். ஆகவே உடனடியாக தென்னாட்டில் அணு மின்சார நிலையத்தை சர்க்கார் துறையில் தைரியமாக ஆரம்பிக்க வேண்டும். இல்லாவிட்டாலும் உணவு மண்டலம், போலீஸ் மண்டலம் என்று ஆரம்பிக்கிறார்களே அதுபோல அணு மின்சார நிலையத்தை ஆரம்பிப்பதற்காக தென் னாட்டில் இருக்கக்கூடிய நான்கு ராஜ்யங்களுமாகச் சேர்ந்து ஒரு மண்டல அடிப்படையில் இதை ஆரம்பிக்க முயற்சி செய்யக்

கூடாதா? அப்படிப்பட்ட நடவடிக்கை எடுக்க முயற்சி எதுவும் செய்யாமல் "லாம்", "போம்" போட்டு கைநழுவவிட்டால் அது சரியல்ல என்று வற்புறுத்த விரும்புகிறேன்.

**THE HON. SRI V. RAMAIAH:** அணு சக்தி மின்சார நிலையத்தை தனியார் துறையில் ஆரம்பிக்க உத்தேசிக்கவில்லை. திட்டக் கமிஷனைக் கேட்டிருக்கிறோம். அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லையென்றால் தனியார் துறையில் அனல் மின்சாரத் திட்டத்தை ஏற்படுத்தலாமா என்பதுதான் பரிசிலனையில் இருக்கிறது என்று சொன்னேன்.

**SRI V. K. KOTHANDARAMAN:** "மின்சாரத் திட்டங்களுக்கான மூலதனச் செலவை மேற்கொண்டு அதிகரிக்கத் திட்டக் கமிஷன் இணங்காமற் போகலாம். இத்தகைய நிலைமையில் மாநிலத்தின் மின்சார வசதிகளைப் பெருக்கிக்கொள்வதற்காக தனியார் துறையில் ஏற்படுத்தலாம் என்று இங்கே சொல்கிற போது . . . . . .

**THE HON. SRI R. VENKATARAMAN:** நான் அதை விளக்கிச் சொல்கிறேன். தனியார் ஒரு பாக்டரியை நடத்தி வந்தால் அவர்களுக்குத் தேவையான மின்சாரத்தை அவர்களே உற்பத்தி செய்துகொள்ள அனுமதிக்கலாம் என்பதுதான் யோசனை. அது தவறு இல்லை. மேலும் அவர்கள் உபயோகத்திற்குப் போக மீதமிருந்தால் அதை சர்க்காரே வாங்கிக்கொள்வதிலும் தவறு இல்லை. கனம் கோதண்டராமன் அவர்கள்—இப்படி அனல் மின்சார நிலையத்தை தனியார் துறையில் ஆரம்பிக்க அனுமதி வழங்கிவிட்டால் பின்னர் இங்கே அணு மின்சார நிலையத்தை ஏற்படுத்தவேண்டும் என்று வற்புறுத்துவதற்கு அவசியம் இல்லாமல்—கேஸ் இல்லாமல் போய்விடப்போகிறதே என்று சொல்கிறார்களோ என நினைக்கிறேன்.

**SRI V. K. KOTHANDARAMAN:** அனல் மின்சார நிலையத்தை தனியார் துறையில் ஆரம்பிப்பதனால் இங்கே அணு மின்சார நிலையத்தை ஆரம்பிப்பதற்கு கேஸ் இல்லாமல் போய்விடப்போகிறதே என்று ஐயப்படவில்லை. இந்த மூன்றாவது திட்ட காலத்திலே ஏற்படுகிற நெருக்கடியைச் சமாளிப்பதற்கு அணு மின்சார நிலையத்தை ஆரம்பிக்கவேண்டுமென்றால் அதை ஆரம்பிக்க சர்க்கார் முயற்சி செய்யவேண்டும். அதைவிட்டுவிட்டு தனியார் துறையில் அனல் மின்சார நிலையத்தை ஆரம்பிக்க முயற்சி செய்வது தனியார் துறை வளர்ச்சிக்கு ஊக்கம் காட்ட முயல்கிறார்களோ என்று எண்ண வேண்டியிருக்கிறது. காரணம் அதற்கு செலவு அதிகப்படியாக ஆகிறது. அந்த மின்சாரத்தைக் கொண்டு உற்பத்தி செய்ய முடியாது. அப்படிச் செய்தால் அதன் விலையை உயர்த்தவேண்டும் என்று சொல்லக்கூடிய அளவிற்கு நிலைமை ஏற்பட்டுவிடும் என்பதை கனம் அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். ஆகவே இன்றைய தினம் தனியார் துறையிலே எந்தெந்த தொழில்கள் ஆரம்பிக்க

18th August 1961] [Sri V. K. Kothandaraman]

அனுமதிக்கவேண்டும், எதை எதை பொதுத்துறையிலே ஆரம்பிக்கப்படவேண்டும் என்பதுதான் நம் முன்னுள்ள பிரச்னே. லேசென்ஸ் பெற்று நடத்தக்கூடிய கார்பொரேஷன்கள் இருக்கின்றன. அந்தக் கார்பொரேஷன்கள் கிராமத்தில் இருக்கக்கூடிய விவசாயிகள் நலனுக்காக அபிவிருத்தி செய்யவேண்டும் என்பது அவர்கள் கருத்தல்ல. அவர்களின் குறிக்கோள் எல்லாம் அதிகமான லாபம் சம்பாதிப்பதிலேதான் இருக்கிறது. ஆகவே லாபத்தை அடிப்படையாகக்கொண்டு அதைக் குறிக்கோளாக வைத்து நடத்திக்கொள்ள தனியார் துறையிலே மேலும் மேலும் அதிகத் தொழில்களைப் பெருக்குகின்ற ஒரு நிலைமைதான இப்பொழுது ஏற்படுகிறது. ஆகவே இம்மாதிரி அல்லாமல் பொதுத் துறையிலே இன்னும் மேலும் மேலும் தொழில்களை ஏற்படுத்த வேண்டுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் அடிப்படையான குறிக்கோள் விவசாய அபிவிருத்திசெய்து உணவு உற்பத்தி செய்வது தான். ஆனல் உணவை எந்த அளவுக்கு பெருககவேண்டுமோ அந்த அளவுக்கு மின்சாரம் கொடுக்கவேண்டும். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தொழில் அபிவிருத்தி பெருக்கவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனல் அந்த அளவிற்கு தொழில் உற்பத்தி பெருக்குவதற்கு போதுமான மின்சார வசதி பெருகவில்லை. அனல் மின்சாரம் தனியார் துறையில் ஆரம்பிக்கப் போவது என்று சொல்வது வருந்தத்தக்க விஷயமாகும். ஆகையால் இந்த மூன்ருவது ஐந்தாண்டு திட்டகாலத்தில் மேலும் அதிகப்படியான அளவிற்கு சர்க்கார் ஈடுபட்டு இம்மாதிரியான தொழில்களை ஆரம்பிப்பதற்கு தீவிர முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டுமென்று இந்தச் சந்தர்ப்பத்தில் கனம் அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக்கொண்டுவர விரும்புகிறேன்.

இதுபோன்றுதான் மில்களை எடுத்துக்கொண்டால் இப்போது அவற்றில் மூன்று ஷிப்ட்கள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. ஆனல் ஏப்ரல், மே மாதங்களில் 15 தினங்கள்தான் அவர்கள் உபயோகப்படுத்திக்கொள்ள வேண்டுமென்று சொல்லப்படுகின்றன. எப்ரல், மே மாதங்களில்தான் இருக்குமோ அல்லது ஜுன் ஜுலை மாதங்களில்கூட போகுமோ அல்லது மார்ச்சிலேகூட இம்மாதிரி வெட்டு ஏற்படுமோ என்று சொல்லமுடியாது. ஆகையால் இதுபோன்ற நிலைமை ஏற்படாமல் தவிர்ப்பதற்கு மில் முதலாளிகள் எல்லாம் சேர்ந்து அனல் மின்சார நிலையத்தை ஏற்படுத்த முன்வந்திருக்கிருர்கள். சர்க்கார் இதை எதிர்த்து அவைகளை எடுத்து நடத்துவதற்கு ஒரு முடிவு எடுக்க வேண்டும். தவிர இந்த மின்சார கட்டுப்பாடு விஷயத்திலேயும்கூட ஏழை, பணக்காரர்கள் என்ற பாகுபாடு காட்டப்படுகிறது என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் கனம் அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். ஏழைகள் சாப்பிடக்கூடிய ராகி, சோளம், கம்பு போன்ற உணவுப் பொருள்களை அறைக்கும் மில்களுக்கு மின்சாரக் கட் 25 சதம், 50 சதம் என்று இருக்கிறது. கொஞ்சம் வருவாய்

வசதி பெற்றுள்ள மக்கள் சாப்பிடக்கூடிய அரிசி போன்ற உணவுப் பொருள்களை அறைக்கும் பெரிய பெரிய நிலப்பிரபுக் களும், குபேரர்களும் நடத்தக்கூடிய நெல் மில்களுக்கு இந்த மின்சாரக் கட் கிடையாது. இந்த அடிப்படையில்தான் அவர் களுக்குச் சலுகைக் காட்டப்படுகிறது. இம்மாதிரி கரண்டு கட் இருக்குமானால் இது நியாயமாக இருக்காது என்று கனம் அமைச்சர் அவர்களுக்குச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். டாரிப் காரண்டி அடிப்படையிலேதான் சர்சார்ஜ் வசூலிக்கப்பட வேண்டுமென்று சொல்லப்படுகிறது. சீப் என்ஜினியர் உத்திரவு போட்டும்கூட இது ஒரே இடத்தில்தான் வசூல் செய்யப்படுகிறது. மாகாணம் பூராவும் டாரிப் காரண்டி அடிப்படையிலேதான் வசூல் செய்யப்படவேண்டுமென்று அரசாங்கம் உத்திரவு போடவேண்டும் அதைத் தவிர அதிகப்படியான பம்பு செட்டுகள் போடவேண்டு மென்று கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அதோடு நிறுத்தாமல் அதிகாரிகளைப்போட்டு கணக்கு எடுத்து டாரிப் காரண்டி அடிப்படையிலே மின்சாரக் கட்டணத்தை வசூலிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். வட ஆற்காடு ஜில்லா விலே அதிகமான பம்பு செட்டுகள் போடப்பட்டிருக்கின்றன என்று பெருமையோடு சொன்னார்கள். அங்கு 70, 80 சத விகிதத் திற்குக் கீழ்தான் தண்ணீர் போகக்கூடிய அளவிற்கு நிலைமை ஏற்பட்டிருக்கிறது. சோழவள நாடு சோறுடைத்து என்று சொல்லும் தஞ்சாவூர் ஜில்லாவிற்கு அடுத்து வடஆற்காடு ஜில்லாதான் அதிக உணவு உற்பத்தி பெருக்கக்கூடிய நிலைமை யில் இருக்கிறது. இந்த ஜில்லாவையும் தஞ்சை ஜில்லா அளவிற்குக்கொண்டுவரவேண்டும். நடைமுறையிலே கவனம் செலுத் தாத காரணத்தினால்தான் அங்கு அந்த அளவுக்கு சேதம் ஏற்பட்டிருக்கிறதென்பதை நாம் பார்க்கிறோம். ஆகையால் இதை கவனத்தில் கொண்டு பாலார் பேசின் ஸ்கீமைத் திருத்தவேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன். பம்பு செட்டுகளுக்குக் கனக்ஷன் கொடுக்கக்கூடிய ஒரு தாராள மனப்பான்மை காட்ட வேண்டும். கனம் அமைச்சர் அவர்கள் சொல்லுவார்கள். இது மின்சார இலாக்கா சம்பந்தப்பட்ட விஷயம் அல்ல என்று. ஆனால் பி.டபிள்யூ.டி. இலாக்காவுக்குப் போனாலும்கூட மின்சார இலாக்கா வுக்கு முன்னதாகவே இந்த விஷயம் போய்விட்டதென்று சொல்லிவிடுகிறார்கள். இது டிஸ்ட்ரிக்ட் டெவலப்மெண்ட் கவுன் சில் மீட்டிங்கில்கூட பரிசீலிக்கப்பட்டது. இதுபோல் இது மின்சார கார்பொரேஷனுக்கு வந்தும்கூட சரியாகப் பரிசீலிக்கப் படவில்லை. நாங்கள் மட்டுமல்ல வட ஆற்காடு ஜில்லாவிலுள்ள எல்லாக் கட்சி அங்கத்தினர்களுமே சேர்ந்து ஏகமனதாக இந்த விஷயமாக ஒரு தீர்மானம் நிறைவேற்றி சர்க்காருக்கு அனுப்பி யிருக்கிறார்கள். கார்பொரேஷனை சர்க்கார் எடுத்து நடத்தக்கூடிய அளவிற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று இந்த நேரத்தில் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இதுபோலவே மின்சார அபிவிருத்தி ஏற்படுத்தி பெருமைபடக்கூடிய அளவிற்கு நமது சீப் என்ஜினீயர் முயற்சி செய்திருக்கிறார்கள். இதுபோலவே அவர்களுடைய இலாகாவில் வேலை செய்யும் அதிகாரிகளும் சிப்பந்

18th August 1961] [Sri V. K. Kothandaraman]

திகளும் உழைத்திருக்கிறார்கள். அவர்களைப் பாராட்டுகிறேன். இந்த இலாகாவில் வேலை செய்யும் சிப்பந்திகளின் குறைகளையும் சர்க்கார் தீர்க்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். இங்குள்ள சிப்பந்திகள் இதற்குமுன் நடந்த போராட்டத்தில் ஈடு பட்ட காரணத்தினால் அவர்களில் பலர் பல ஆண்டுகள் வேலை செய் திருந்தும்கூட, சீனியராக இருந்தும்கூட அவர்களுக்கு ப்ரமோஷன் கொடுக்காமல் ஓவர்லுக் செய்யப்பட்டு ஜூனியராக இருக்கும் சிப்பந்திகளுக்கு ப்ரமோஷன் கொடுக்கக்கூடிய நிலைமை இப்போது ஏற்பட்டிருக்கிறது. இது சீப் என்ஜினியருக்குத் தெரியுமோ, தெரியாதோ எனக்குத் தெரியாது. ஆனால் நடைமுறையில் இம் மாதிரியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதுமாத்திரமல்ல. ப்யூன்கள் "தேர்ட் பார்ம்" அல்லது எட்டாவது ஸ்டான்டேர்ட் படித்திருந்தால் அவர்களுக்கு அட்டென்டர் போஸ்ட் கொடுக்க வேண்டுமென்ற சீப் என்ஜினியர் அவர்களின் உத்தரவைக்கூட மீறக்கூடிய அளவிற்கு ஒருசில ஜில்லாக்களில் ஒரு வருடமாகியும் கூட அவர்களை அட்டன்டர்களாக போடமுடியாத நிலை இருந்து கொண்டிருக்கிறது. இப்படி பாகுபாடு படுத்தும் முறையிருந்தால் அவர்களுக்கு உற்சாகக் குறைவு ஏற்படும். அப்படி உற்சாகம் குறைந்தால் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத் தின் குறிக்கோள், வெற்றிகரமான முறையில் அவைகளை நிறை வேற்ற முடியாதநிலை ஏற்பட்டால் எல்லோருக்கும் பெரும் அளவில் நஷ்டம் ஏற்படக்கூடிய நிலை ஏற்படும். மின்சார அபிவிருத்தியில் நாம் தீவிர கவனம் செலுத்தவேண்டு மென்பது மட்டுமல்ல. நமது சீப் என்ஜினியர் அவர்கள் அடிக்கடி வெளி நாடுகளுக்கும் போகிறார். அந்நேரத்தில் இங்கு அணு சக்தி நிலையத்தை ஏற்படுத்துவதற்கு இங்கு எந்த அளவு தாதுப் பொருள்கள் இருக்கின்றன, எந்தளவு வசதியிருக் கிறது, என்று அறிந்து அதைப் பயன்படுத்தி இங்கே ஆரம்பிப் பதற்கு தீவிர கவனம் செலுத்தியிருப்பார்கள் என்றுகூட நினைக் கிறேன். அப்படியிருந்தால் அதை மூன்றாவது திட்டத்தில் கண்டிப்பாக ஆரம்பிப்பதற்கு முயற்சி செய்யவேண்டும். அதை மத்திய சர்க்கார் ஏற்றுக் கொள்ளவில்லை என்று சொன்ன போதிலும், தென் இந்தியாவில் ஜோனல் அடிப்படையில் அல்லது நம் ராஜ்யத்திலேயே இதற்காக வேண்டி கடன் நிதி கிளப்பி யாவது அதை அவசியம் ஆரம்பிக்கலாம் என்று சொன்னால் அது பெரும் அளவு, பல துறைகளில், தொழில் துறையினாலும் சரி அல்லது விவசாயத் துறையிலானாலும் சரி பல துறைகளில் அதனால் நாம் மேலும் அபிவிருத்தி காண முடியும் என்று சொல்லிக்கொண்டு அந்த அடிப்படையில் தீவிர கவனம் செலுத்தப் படவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். தனியார் கையை நம்பி வாழக்கூடிய நிலையில் சர்க்கார் மேலும் மேலும் விட்டுக் கொடுக்கும் போக்கு இருக்கக் கூடாது. சுதந்திரக் கட்சியை கண்டு பயப்படும் மனோபாவம் இருக்கக்கூடாது, அதை விட்டுவிட வேண்டுமென்பதைத் தெரிவித்துக்கொண்டு நான் என் பேச்சை முடித்துக் கொள்கிறேன், வணக்கம்.

[18th August 1961

* **SRI A. VEDARATHNAM :** கனம் துணைத் தலைவர் அவர்களே, நமது அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கிற இந்த மின்சாரத் திட்டத்தை நான் முழு மனதோடு ஆதரிப்பதுடன் இந்த விவாதத்தை துவக்கிவைத்த நமது கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினர் அவர்கள் பேச்சைக் கேட்டதும் அது ஒரு பெரிய வியப்பாக இருந்தது. காங்கிரஸ் வர வர கம்யூனிஸ்டாக மாறி வருகிறது என்ற காரணத்திற்காகவே சுதந்திரக் கட்சியைத் தோற்றுவித்ததாக அதன் தலைவர் கூறுகிறார்கள். இங்கேயோ, நமது தோழர் சுதந்திராக் கட்சியைக் கண்டு காங்கிரஸ் பயப்படுகிறது, எங்கே சுதந்திராக் கட்சியாக மாறப் போகிறதோ என்று இவர்கள் அஞ்சுகிறார்கள். ஆனால் எங்களை இப்படி இந்த அவையில் முடுக்கி விடுகிறார்களேயல்லாது இரவோடு இரவாக அவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து விடுகிறார்கள். காங்கிரஸின் கொள்கை வேறு, அதன் தத்துவமே வேறு. அது "ரைட்டிஸ்ட் பார்ட்டி". எப்போதும், செய்கிற காரியங்கள் எல்லாம் ரைட்டாகத்தான் இருக்கும். அதைப் பற்றி யாரும் அஞ்ச வேண்டியதில்லை. தனியார் துறை எது, அரசாங்கத் துறை எது என்ற விஷயத்தில் அவர்கள் (எதிர் கட்சி) யோசனை இல்லாமலேயே ஒரு சரியான மார்க்கத்தை அது கடைப்பிடித்து வருகிறது என்ற விஷயத்தை அவர்கள் நன்றாக நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். இந்த சபை தேர்ந்தெடுக்கப்பட்டு இங்கு கூடியபோது, முதன்முதலாக கவர்னர் பெருமான் அவர்கள் உரை மீது நான் பேசினபோது அகில இந்தியாவிலே நமது மின்சாரத் திட்டம் எவ்வளவு முன்னேற்றம் அடைந்திருக்கிறது என்ற விஷயத்தைப்பற்றி சவிஸ்தாரமாக நான் பேசியிருப்பதினால் அதை மீண்டும் நான் இங்கு வற்புறுத்த விரும்பவில்லை. எனினும் இந்த சந்தர்ப்பத்தில் அதிலுள்ள சில குறைகளை எடுத்துக்காட்ட வேண்டியது எங்களுடைய கடமைகளில் ஒன்று என்ற காரணத்தினால் அமைச்சர் அவர்களின் கவனத்திற்கு நான் சில விஷயங்களைக் கொண்டு வர விரும்புகிறேன். கனம் அமைச்சர் எங்களுக்கு அடுத்த வீட்டுக்காரர் என்ற காரணத்தினாலோ என்னவோ, தமிழ்நாடு முழுவதையும் அவர்கள் ஒரு கண்ணால் பார்க்கிறார்கள், எங்கள் தஞ்சை ஜில்லாவை மட்டும் வேறு கண்ணால் பார்க்கிறார்கள். எங்களை தஞ்சை ஜில்லாவை, தாய் இல்லாப் பிள்ளை மாதிரி, அநாதைப் பிள்ளை மாதிரித்தான் வைத்திருக்கிறார்கள். அங்கு மின்சாரம் எந்தளவு அபிவிருத்தி அடைந்திருக்கிறது என்ற விஷயத்தை அமைச்சர் அவர்களே சொன்னால் போதும். இத்தனை அபிவிருத்திகளைப் பற்றி அவர்கள் சொன்னார்களே, அந்தளவு தஞ்சை ஜில்லாவிலும் நடந்திருக்கிறது என்று அவர்கள் சொன்னால் அதை நான் ஒத்துக் கொள்ள தயாராயிருக்கிறேன். அவர்கள் சொல்ல மாட்டார்கள். அவர்களே ஒத்துக் கொண்டிருக்கிறார்கள், அது தாய் இல்லாத பிள்ளை மாதிரித்தான் இருக்கிறது என்ற விஷயத்தை. ஆகவே, தங்கள் ஜில்லாவை கொஞ்சம் கைதூக்கி விடவேண்டுமென்று கேட்டுக்கொள்ளத்தான் இப்பொழுது இந்த விஷயத்தைக் கூற முன் வந்திருக்கிறேன். ஒரு கிராமத்திற்கு விஸ்தரிக்கவேண்டுமென்று சொன்னாலும்கூட அங்கு ரொம்பவும்

18th August 1961] [Sri A. Vedarathnam]

துர்லபம். ஒரு மைல்கூட நீட்டுவதில்லை. அங்கு, விஸ்தரிப்பு இல்லை என்று சொன்னாலும், இருக்கிற மின்சாரத்தையாவது சரியாக நடத்தும்படிச் செய்தால் அதுவே சந்தோஷமாக இருக்கும். 1952-ம் வருடம் புயலில் எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள், வேதாரண்யத்தில் இருந்த ஒரு டிரான்ஸ்பார்மரை. 100 கி. வோட்ஸ் இருந்தது. சர்க்கார் 7-1/2 லட்சம் ரூபாய் கடன் கொடுத்து 500 ஹை டென்ஷன் போஸ்ட்ஸ் போட்டு இருந்ததை, அது போல் 50 கி. வோட்ஸ் டிரான்ஸ்பார்மர் வந்திருக்கிறது. அங்கு லைட் போட்டால் அது கண்ணை சிமிட்டுகிறது, எரிய மாட்டேன் என்கிறது. ரேடியோ வொர்க் செய்ய மாட்டேன் என்கிறது. இந்த நிலைதான் இருக்கிறது அங்கு பல ஆண்டுகளாக. 1952-ல் இருந்த டிரான்ஸ்பார்மரை "ரிப்ளேஸ்" செய்யவில்லை. அதை நான் அமைச்சர் அவர்கள் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். விஸ்தரிப்பு இல்லாது போனாலும் இருப்பதையாவது "பேர்பெக்டாக" வைத்திருக்கும்படி செய்யவேண்டும். தஞ்சை ஜில்லாவில் உள்ளவர்கள் வெளிச்சம் போடக் கேட்கிறார்கள், ஆகவே அதைக் கவனிக்கவில்லை என்று சொல்லி பாலிஷ் செய்ய லாம். விவசாயத்திற்காக கொடுக்கக்கூடிய இடங்களில்கூட, தென்னடாறு, வளவனூர், வாய்மேடு பம்பிங் ஸ்டேஷன்கள் பூர்த்தி யாகி பல நாட்களாகிவிட்டன. பவர் ஹௌஸ் கட்டி முடிந்தாகி விட்டது. இந்த நாட்டில் அதற்காக, மோட்டார்கள் இல்லை என்ற காரணத்திற்காக இட்டாலி போன்ற வெளிநாடுகளிலிருந்து 35, 40 ஹார்ஸ் பவர் பம்ப் செட்களை வெளிநாடுகளிலிருந்து தருவித்து அவைகூட தஞ்சை ஜில்லா கிராமத்திற்கு வந்து சேருவது சுலப மாகி விட்டது. ஆனால் ஒரு மைல் தூரத்திலுள்ள கரென்ட் அங்கு வரமாட்டேன் என்கிறது. தென்னடாறு, வளவனூர், வாய் மேடு பம்பிங் ஸ்டேஷன்களை இரண்டு மைல்கள் விஸ்தரிக்க வேண்டும். இந்த இரண்டு மைல்கூட விஸ்தரிப்பதில்லை. சொல்ல வேண்டியவர்களிடம் எல்லாம் சொல்லியிருக்கிறோம், அதிகாரிகளிடம் சொல்லியிருக்கிறோம், அமைச்சர் அவர்களிட மும் இதைப் பற்றி தனியே சொல்ல நினைத்தேன், இப் பொழுது அதற்கு சந்தர்ப்பம் கிடைத்திருப்பதால் இந்த சபை மூலமாகவே சொன்னால் கொஞ்சம்கூட துரிதமாக நடக்கும் என்ற ஆசையால் சொல்கிறேன். இந்த மாதிரி தஞ்சை ஜில்லாவுக்கு இப்போது ஒரு விமோசனம் வர வேண்டும். அதற்கான நட வடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டும். மற்ற விஷயங்கள் எல்லாம் முன் பின்னாக இருந்தாலும், லிப்ட் இறிகேஷன் விஷயத் தில் உடனடியாக வேண்டிய நடவடிக்கைகள் எடுக்காவிட்டால் இந்த வருஷ மகசூல் கிடைக்காது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். வாய்க்கால்கள் எல்லாம் வெட்டி தயாராய் இருக் கின்றன. பம்பிங் ஸ்டேஷன்கள் எல்லாம் தயாராய் இருக்கின்றன. சுமார் மூன்று மைல் தூரத்திலிருந்து கரண்ட் கனெக்ஷன் இல்லை என்ற காரணத்திற்காக சுமார் 4,000 ஏக்கர்களுக்கு பாசன வசதி கிடைக்காமல் போகிறது. இதை உடனடியாக கவனிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மின்சாரத் துறையில் நமது

10-00 a.m.

மாகாணம் எல்லோரும் பெருமைப்படக்கூடிய அளவில் முன்னேற்றகரமான முறையில் வளர்ந்திருக்கிறது. இது தவிர அணு மின்சார நிலையம் வரவேண்டும் என்று நீண்ட நாட்களாக ஆசைப்பட்டுக்கொண்டு இருக்கிறோம். நம்முடைய மின்சார அமைச்சர் அவர்களின் முயற்சியில் இது ஈடேறும் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது. ஆனால் இந்த அணு மின்சாரம் வந்த பிறகுதான் தஞ்சை ஜில்லாவுக்கு வேண்டிய வசதி செய்ய முடியும் என்று இதை ஒத்திப்போட்டு விடக்கூடாது என்று கேட்டுக்கொண்டு, இதில் பேசுவதற்கு அவகாசம் தந்ததற்கு நன்றி தெரிவித்துக் கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER: Hereafter I will fix a time-limit of 15 minutes for each hon. Member.

(Sri N. S. Ramalingam in the Chair.)

SRI M. SELVARAJ: மதிப்பிற்குரிய சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, இந்த மின்சார இலாகா வரவு செலவு திட்டத்தை நம்முடைய கனம் அமைச்சர் அவர்கள் தந்திருக்கிறார்கள். அதன் பேரில் என்னுடைய சில கருத்துக்களை கூற விரும்புகிறேன். பொதுவாக மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மின்சார அபிவிருத்திக்கு மூலதனச் செலவாக 100 கோடி ரூபாய் என்று ஒதுக்கியிருக்கிறார்கள். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவில் சுமார் 79 கோடி ரூபாய் செலவு செய்தும், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு ஒதுக்கியிருக்கும் பணம் போதாது என்று இதே மாமன்றத்தில் பல தடவை நாம் எடுத்துக் கூறியிருக்கிறோம். மேலும் கனம் அமைச்சர் அவர்கள் தந்திருக்கின்ற குறிப்பில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவில் நமக்குத் தேவையான மின்சாரம் சுமார் 14.48 லட்சம் கிலோவாட்டாக இருக்கும் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் இன்றைய தினம் நாம் எடுத்திருக்கின்ற திட்ட வேலைகள் எல்லாம் முடிவு அடைந்த பிறகு 8.67 லட்சம் கிலோவாட்டாக இருக்கும் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இவைகளைப் பார்க்கிறபோது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவில் 6 லட்சம் கிலோவாட் மின்சாரம் நம்முடைய ராஜ்யத்திற்கு பற்றாக் குறையாக இருக்கும் என்று தெட்ட தெளிவாக விளங்குகிறது. அதிலும் நெய்வேலியில் உற்பத்தியாகும் அணு மின்சார உற்பத்தியின் மூலமாக 2.16 லட்சம் கிலோவாட் மின்சாரம் கிடைக்கும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. கழிந்த ஆண்டிலேயே நெய்வேலியில் மின்சார நிலையம் துவங்கும் என்று சொன்னார்கள். இரண்டு மாதங்களுக்கு முன்னால் நடந்த சட்டசபைக் கூட்டத்திலும் நம்முடைய அமைச்சர் அவர்கள் செப்டம்பர் மாதத்தில் ஒரு யூனிட் வேலை செய்ய ஆரம்பிக்கும் என்று தெரிவித்தார்கள். இப்போது செப்டம்பரில்கூட ஒரு யூனிட் வேலை செய்ய துவங்குமா என்பது சந்தேகமான நிலைமையில்தான் இருக்கிறது என்பதை நாம் பார்க்கின்றோம். ஆகவே இதிலே குறிப்பிட்டிருக்கிற ஆறு லட்சம் கிலோவாட் மின்சாரத்தை பெறுவதற்கு எந்தவிதமான நடவடிக்கை எடுக்கப்போகிறோம்

18th August 1961] [Sri M. Selvaraj]

என்பதை கனம் அமைச்சர் அவர்கள் கூறியிருப்பதைப் பார்க்கின்ற நேரத்தில், அணு மின்சார நிலேயம் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் வந்தால் ஒழிய வேறு வழியில்லே என்கின்ற நிலைமையை நாம் இங்கே பார்க்கின்ருேம். அதற்கு மத்திய சர்க்காரிடத்திலும், திட்டக் கமிஷனிடத்திலும் இந்தச் சர்க்கார் வற்புறுத்தி வருகிறது என்றும், இதற்கான செலவை பொதுத் துறையில் திட்டக் கமிஷன் இணங்காமல் போகலாம் என்கின்ற ஒரு வார்த்தையையும் கூறியிருக்கிருர்கள். இவைகளை எல்லாம் பார்க்கின்ற நேரத்தில்தான் தென்னகத்திற்கு வேண்டிய உதவிகளை போதிய அளவு செய்து கொடுக்கவில்லே என்று கூறவேண்டியிருக்கிறது. நம்முடைய விவசாயத்தை பெருக்கவேண்டும் என்று சொல்லுகின்ற நேரத்தில் இந்த மாகாணத்தை பொறுத்த வரையில் இனிமேல் கிணறுகளிலிருந்து நீரை உபயோகித்துதான் விவசாயத்தை பெருக்கிக் கொள்ள வேண்டும் என்று சொல்லுகின்ற நேரத்தில், அதற்கு அடிப்படையாக இருக்கின்ற மின்சாரம் போதிய அளவு கிடைக்கவில்லே என்ருல் நம்முடைய லட்சிய அளவை எப்படி நிறைவேற்றப்போகிருேம் என்பதை நாம் கவனிக்கவேண்டிய நிலைமையில் இருக்கிருேம். மின்சாரத்தில் நாம் முன்னேறியிருக்கிருேம் என்ற அளவில், நாம் இந்திய துணை கண்டத்தில் மூன்ருவதாக இருக்கிருேம், வடக்கே மகாராஷ்டிரமும், மேற்கு வங்காளமும் இருக்கிறது என்று சொன்னர்கள். இந்த இரண்டு மாகாணத்திலும் இதுபற்றிய கூடுதல் புள்ளி விவரங்களையும் தந்திருந்தால் நம்முடைய மாகாணத்தைப் பற்றிய புள்ளி விவரத்தோடு ஒப்பிட்டுப் பார்ப்பதற்கு உறுதுணையாக இருந்திருக்கும். இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களை நீட்டி வேலேகளை முடித்த பின்னும் மின்சாரத்தை உபயோகிப்பதை எடுத்துக்கொண்டால், தனி நபர் 60 யூனிட்டுகள் உபயோகிப்பதாகவும், மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் 160 யூனிட்டுகள் தனிநபர் உபயோகமாக இருக்கும் என்றும் சொல்லுகிருர்கள். அவர்கள் அதை ஒரு உதாரணமாக வைத்துக்கொண்டு, மேலே நாட்டில் ஒவ்வொரு தனிநபரும் 2,000 முதல் 4,000 யூனிட் வரை உபயோகித்து வருகிருர்கள் என்றும் சொல்லப்பட்டது. அந்த அளவுக்கு அவர்களுடைய பொருளாதார வசதி பெருகியிருக்கிறது. ஆனல் அந்த அளவில் நம்முடைய பொருளாதார வசதியை பெருக்குவதற்கு நம்முடைய அரசாங்கம் இன்னும் தயங்கிக் கொண்டிருக்கிறது. இதற்காக நாம் மத்திய சர்க்காரைத் தட்டிக் கேட்க வேண்டும். எதெற்கெடுத்தாலும் திராவிட முன்னேற்றக் கழகத்தார் தெற்கு தேய்கிறது, வடக்கு வாழ்கிறது, என்று குறை கூறுகிருர்கள் என்று வெளிப்படையாகப் பொதுக் கூட்டங்களில் சொல்லுகிருர்கள். அது மட்டுமல்ல, இந்தியாவிலேயே மின்சார அபிவிருத்தியில் நம் நாடு முதன்மையாக இருக்கிருேம் என்று சொல்லிக்கொண்டிருக்கிருர்கள். ஆனல் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில், அதாவது 1965-66-வது வருடத்தில் ஏற்படப்போகும் பற்ருக் குறையைத் தீர்த்துக் கொள்வதற்கு இப்போதே நாம் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். நான்

[Sri M. Selvaraj] [18th August 1961

கேட்டுக்கொள்வது என்னவென்ருல், பொதுப்படையாக, உறுதியாக மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் அணு மின்சார நிலேயம் ஏற்படுத்த வேண்டும் என்று ஒரு தீர்மானத்தை நிறைவேற்ற வேண்டும் என்று இந்த நேரத்தில் கேட்டுக்கொள்கிறேன். நமது அண்டை ராஜ்யமாகிய கேரளாவில் பொதுஉடமை கட்சித் தோழர்கள், அவர்கள் ராஜ்யத்திற்கு ஒதுக்கவேண்டிய தொகை சரியாக ஒதுக்கப்படவில்லே என்ற காரணத்திற்காக பொதுப்படையாக எல்லாக் கட்சித் தோழர்களும் சேர்ந்து ஒரு தீர்மானத்தை அனுப்பவேண்டும் என்பது ஒரு பொதுப் பிரச்னேயாக அங்கே இருந்து கொண்டிருக்கிறது. அந்த முறையில் இங்கேயும் அணு மின்சார நிலேயம் உடனடியாக ஏற்படுத்த வேண்டும் என்று ஒரு தீர்மானம் இதே சபையில் நிறைவேற்றி அனுப்ப வேண்டும் என்று இந்த அமைச்சரவையைக் கேட்டுக்கொள்கிறேன்.

இதற்கடுத்தபடியாக, கிராமங்களுக்கு அதிகமான அளவில் மின்சார வசதி கொடுத்திருக்கிருேம் என்று சொல்லுகிருர்கள். அங்கு எந்த அளவுக்கு மின்சாரம் வருகிறது என்று பார்ப்போமேயானுல், கிராமங்களுக்கு வருகின்ற மின்சாரத்தின் தரம் மிகவும் குறைந்திருக்கிறது. இதன் காரணமாக ஓடிக் கொண்டிருக்கின்ற மோட்டார் சில நேரங்களில் திடீரென்று நின்று விடுகிறது. இவ்விதம் நின்ற பிறகு அதை சரியான முறையில் இயக்க முடிவதில்லே. இதில் முக்கியமாக இருக்கின்ற ஆர்மேச்சர் என்பது கெட்டு, பலவிதத்தில் நஷ்டங்கள் ஏற்படுகின்றன. ஆகவே கூடுமானவரையில் அதிகப்படியான அளவு தரம் கூடின மின்சாரத்தைக் கொடுப்பதற்கு வழிவகை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

மேலும், கிராம ஊராட்சிமன்றங்கள், நகர சபைகள் இவைகளிலிருந்து மின்சார வசதி வேண்டும் என்று கேட்டு வருகின்ற கோரிக்கைகள் புறக்கணிக்கப்படுகின்றன. குறிப்பாக என் தொகுதியில் விருத்தாசலம் நகராட்சி மன்றத்தை எடுத்துக் கொண்டால், இரண்டு ஆண்டுகளுக்கு முன்ஞல் 50, 60 லேட்டுகள் புதிதாக போடவேண்டும் என்று தீர்மானத்தைப் போட்டு இரண்டரை ஆண்டுகள் ஆகியும் இதுவரையிலும் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கவில்லே. இதன் காரணமாக அங்கே இருக்கின்ற மக்களுக்கு இதற்கான பதில் சொல்லவேண்டியிருப்பதால் பல இடங்களிலும் பெட்ரோமாக்ஸ் லேட்டை பஞ்சாயத்து போர்டார் போட்டு வைத்திருக்கிருர்கள். இதைப்பற்றி அங்கே கேட்கும்போது மேலே இருக்கின்ற அதிகாரிகளிடமிருந்து உத்தரவு வரவில்லே என்று தெரிவிக்கிருர்கள். ஆகவே இது சம்பந்தப்பட்ட எஸ்டிமேட்டுகள் வந்தவுடன் காலதாமதம் செய்யாமல் உடனுக்குடன் மேலே இருக்கின்ற அதிகாரிகள் உத்தரவுகள் கொடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என்று இந்த நேரத்தில் கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் கிராமங்களுக்கு மின்சார விஸ்தரிப்புக்காக மனு கொடுத்தவுடனேயே சம்பந்தப்பட்ட நீர்ப்பாசன இலாகாவிற்கு அனுப்பி க்ளியரன்ஸ் ஸர்ட்டிஃபிகேட் கொடுக்கவேண்டுமென்று

18th August 1961] [Sri M. Selvaraj]

சொல்லுகிறார்கள். இன்றைய தினம் தென் ஆற்காடு மாவட்டத்தை எடுத்துக் கொண்டால், அதிலே மிகவும் பிற்போக்கிலுள்ள கிராமங்கள் பல இருக்கின்றன. நீர்ப்பாசன வசதிகள் ஓரளவுக்கு ஏற்பட்டிருக்கிறதேயொழிய, நீர்வளத்திற்கேற்ப பம்ப் செட்டுகள் வைத்து தண்ணீர் இறைத்து விவசாயம் செய்யவேண்டுமென்று சொல்லும்போது, பம்ப் செட்டுகள் வைத்தால் தண்ணீர் உறிஞ்சப்பட்டுவிடும் என்று சொல்லுவது முறையாகாது. வாய்க்கால்கள், ஏரிகள் முதலியவைகள் இருக்கும் இடத்தில் 30 அடி அல்லது 20 அடி சுற்றளவில் 10 எச்.பி. அல்லது 15 எச்.பி. ஆயில் என்ஜின் வைத்து விவசாயம் செய்து கொண்டிருக்கும்போது அதற்கே மின்சாரம் கேட்கும்போது பி.டபிள்யூ.டி. க்ளியரன்ஸ் ஸர்ட்டிபிகேட் வேண்டுமென்று சொல்லுகிறார்கள். இதனால் மிகவும் கால தாமதம் ஆகிறது. ஏற்கெனவே பி.டபிள்யூ.டி. சீப் என்ஜினியர் அவர்களிடம் இதைப் பற்றித் தெரிவித்ததற்கு பரவலாகக் கொடுக்கலாம் என்று உத்திரவு பிறப்பித்தும், இலாகாவினர் நடவடிக்கை எடுக்காமல் இருக்கிறார்கள். அதையும் கவனித்து விவசாயிகளுக்கு உதவிகரமாக வேண்டியவைகளைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பிற்பட்ட பகுதிகளில் இருக்கக்கூடிய விவசாயிகளுக்கு பல சலுகைகள் கொடுத்திருக்கிறோம் என்று சொல்லும்போது, அத்தகைய சலுகைகளில் ஒரு குதிரை வேகத்திற்கு 25 ரூபாய் என்றாவது உத்திரவாதத் தொகையை வைக்கவேண்டும். குறிப்பாக விருத்தாசலம் பகுதியில் ஊமங்கலம் தொகுதி, மற்றும் பண்ருட்டியில் காடாம்புலியூர் பிர்க்காவில் பல கிராமங்கள் இருக்கின்றன. அங்கே 300 அடி அல்லது 400 அடிக்குக் கீழேதான் தண்ணீர் கிடைக்கிறது. அத்தகைய கிராமங்களுக்கு மின்சாரம் கொடுக்கவேண்டுமென்று சொல்லும்போது, அப்படி கொண்டுபோவதனால் ரெம்யூனரேட்டிவாக இல்லை என்று ஒதுக்கி வைத்திருக்கிறோம் என்று சொல்லுகிறார்கள். பின் தங்கிய கிராமங்களுக்கு முதலிடம் கொடுத்து அவைகளை முன்னுக்குக் கொண்டுவரும் வாய்ப்பினைத் தேடித்தர வேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் விவசாயிகளுக்கு குருப்பிங் ஸிஸ்டம் வைத்து இப்போது சில மாவட்டங்களில் குருப்பிங் ஸிஸ்டத்தை எடுத்து வருகிறோம் என்று சொல்லுகிறார்கள். தென் ஆற்காடு மாவட்டத்திலுள்ள விவசாயிகளுக்கு இன்னும் குருப்பிங் ஸிஸ்டம் இருந்து கொண்டுதான் இருக்கிறது, இன்னும் மாறவில்லை. ஆகையால் அவர்களுக்கு உதவிகரமான விதிகளைப் பிறப்பித்து, குருப்பிங் ஸிஸ்டத்தை எடுக்கும் முறையில் வழிவகைகளைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் சர்க்கார் துறையில் மின்சார அபிவிருத்தி செய்கிறோம் அதற்கு வேண்டிய திட்டங்களைப் போடுகிறோம் என்று சொல்லும் நேரத்தில், தனிப்பட்ட முதலாளிகளுக்குக் கடன் தருகிறோம் என்று சொல்லும்போது, இரண்டு திட்டங்களும் ஏக காலத்தில் நடக்கும்போது பல மாவட்டங்களில் பல கிராமங்கள் பாதிக்கப்

படுவதாக பரவலாகச் சொல்லுகிறார்கள். தனியார் நிர்வாகத்தி லுள்ளவைகளை சர்க்காரே மேற்கொண்டு நடத்துவதற்கான வாய்ப்பினைச் செய்து தரவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, அதோடுகூட மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் லட்சிய அளவு பூர்த்தியாக அனு மின்சாரத் திட்டத்தைக் கொண்டுவருவதோடு, விருத்தாசலம் தொகுதியில் இரண்டு, மூன்று திட்டங்கள் பெரிய அதிகாரிகள் கையில் உத்திரவு போடப்படாமல் தடைபட்டிருக் கிறது. உதாரணமாக கிளிமங்கலம் பகுதியில் 200 பம்ப் செட்டுகள் வைப்பதற்காகக விண்ணப்பம் கொடுத்தும் சரியான முறையில் அமுல் செய்யப்படவில்லை. அகரம், வடகரை, நந்தமங்கலம், நல்லூர் பிளாக் வட்டாரத்திலே, எந்த கைத்தொழில் ஏற்பட வேண்டுமென்றாலும் மின்சாரம் இருந்தால்தான் முடியும் என்று சொல்லுகிறார்கள். ஆகையால் கைத்தொழில்கள் ஏற்படுவதற்காக மின்சார வசதி செய்து தரவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, மிகவும் பிற்பட்ட பகுதியாகிய தென் ஆற்காடு மாவட்டத்திற்கு, குறிப்பாக விருத்தாசலம் பகுதியில் மின்சார வசதி செய்து தர வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

DR. (SRIMATHI) T. S. SOUNDARAM RAMACHANDRAN: கனம் சபைத் தலைவர் அவர்களே, இந்த மின்சார வரவு-செலவுத் திட்டத்தை ஆதரித்துப் பேசுவதிலே, தமிழ் நாட்டின் சாதனையைப் பற்றி மிகப் பெருமை கொள்ளுகிறேன்—மற்றவர் களுடன் அதைப் பகிர்ந்து கொள்ளுகிறேன். ஆனால், எங்கும் இருக்கின்றார் போல, உற்பத்தியாகக்கூடிய அளவுக்கு மிஞ்சி தேவைகள் கூடிக்கொண்டு போவதால், நாம் எந்த முறையில் எல்லாம் மின்சாரத்தை அதிகமாக உற்பத்தி செய்து நமது தேவையை சமாளிக்க முடியும் என்பதில் எவ்வளவு தீவிரம் காட்ட வேண்டுமோ அதற்கு அதிகமாக மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் காட்டவேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறேன்.

அதிலே, எந்த விதத்தில் மின்சாரம் உற்பத்தி செய்யலாம் என்பதில் தமிழ் நாட்டில் நமக்கு ஜீவ நதிகள் ஜாஸ்தியாக இல்லை, நீர்வீழ்ச்சிகள் போன்றவைகள் 12 மாதங்களும் தண்ணீர் இருக் கக்கூடிய சாதனங்கள் இல்லை. ஆகையால், சதர்ன் ரீஜனல் கிரிட் ஏற்படுத்தப் போவதாகக் கேள்விப்படுகிறோம். வேலை நடக் கிறது என்று கேள்வி இருந்தாலும், அதை பரிபூர்ணமாகச் செய்து எங்கு அதிகமாக உற்பத்தி செய்ய முடியுமோ அங்கே உற்பத்தி செய்து, அங்கிருந்து நமக்குக் கிடைக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

அதே போல தெர்மல் ஸ்டேஷன். அதுவும் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் பார்த்தால், ஏற்படக்கூடிய விவசாய, தொழில் அபிவிருத்தி ஆகியவைகளுக்குப் போதுமான அளவு கிடைக்குமா என்பது—நான் இதிலே பெரிய நிபுணர் என்று சொல்லிக்கொள்ளவில்லை—சந்தேகமாக இருக்கிறது.

[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]

18th August 1961]

இதிலே நம் பாலிஸியிலேயே தனியார் துறையில் சிலர் தங்களுக்கு வேண்டிய அளவு மின்சாரத்தை தாங்களே உற்பத்தி செய்து கொள்ள முன் வருகிறார்கள். அவர்களுக்கு வேண்டியதை அவர்கள் செய்து கொள்ளுவதற்கு வகை செய்துகொடுப்பது நல்லதுதான். அதே சமயத்தில் தனியார் துறையில் ஏற்படுத்து வதற்கு அயல் நாட்டு நாணயச் செலாவணியை அனுமதிக்கும் போது மக்கள் துறையில் செய்யவேண்டியவைகளுக்கு போது மான அளவுக்கு கிடைக்குமா என்ற சந்தேகம் ஏற்படுகிறது. இரண்டையும் பார்த்து எவ்வளவு தூரம் அதிகமாக இந்த மின்சார சாதனங்களை தனியார் துறையிலேயும் சரி, மக்கள் துறையிலேயும் சரி அவைகளைத் தீவிரமாக உற்பத்தி செய்ய முடியுமோ அதற் கான பெரும் முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டுமென்ற ஆலோ சனையைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். மின்சார வேலைத் திட்டத்திற்கு, முக்கியமாக கிராமங்களில் மின்சாரத்தை விஸ்தரிப்பதற்கு நமக்கு அதிகமாக போஸ்ட்கள் தேவையாக இருக்கின்றன. அதுதான் மிகவும் முக்கியமாக இருக்கிறது. சிமெண்ட் அளவுக்கு மிஞ்சி உற்பத்தி செய்கிறோம் என்று இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு நினைத்தது இப்போது எதற்குமே போத வில்லை. கிராமங்களில் நிறைய தூரம் கொண்டுபோகும்போது சிமெண்ட் போஸ்ட் இல்லை என்ற காரணத்தினால் பல இடங்களில் வேலை தாமதப்படுகிறது. இன்னொன்று டிரான்ஸ்ஃபார்மர் இல்லை என்ற ஒரு காரணமும் இருக்கிறது. 10,000 கிராமங்களுக்கு மின் சாரத்தை விஸ்தரித்திருக்கிறோம் என்று சொல்லிக்கொள்கிறோம். அங்கே எவ்வளவு பம்ப்செட்டுகளுக்கு மின்சாரம் கொடுத்திருக் கிறோம், அங்கே எவ்வளவு கிணறுகள் இருக்கின்றன என்று பார்க்கும்போது அது 4-ல் ஒரு பங்கு, 6-ல் ஒரு பங்கு, அல்லது 10-ல் ஒரு பங்காகத்தான் இருக்கிறது. ஏனென்றால், டிரான்ஸ் பார்மர் கிடைக்கவில்லை என்று சொல்லுகிறார்கள். எங்கு பிரெஷர் இருக்கிறதோ அங்கு வேண்டுமானால் துரிதமாக வேலை நடக்கிறது. அதனால்தான் டிரான்ஸ்பார்மர், மற்ற எலெக்ட்ரிகல் எக்விப் மெண்ட்ஸ், சிமெண்ட் இவைகளுக்கெல்லாம் ப்ரையாரிட்டி கொடுத்து அதிகமாக உற்பத்தி செய்தால்தான் வேலை துரிதமாக நடக்க முடியும். ஒரு கிராமத்தில் 60-70 கிணறுகள் இருந்தால் 10-20 பம்ப்செட்டுகளுக்கு மின்சாரம் கொடுத்து விட்டு அடுத்த கிராமத்திற்குப் போகாமல் அப்போதுதான் பூர்த்தி செய்ய முடியும். இவைகளின் உற்பத்தியில் முக்கிய கவனம் செலுத்த வேண்டும். நெய்வேலி தெர்மல் திட்டத்தை சீக்கிரமாகத் துவங்கி நடத்தி அதிக அளவுக்கு மின்சாரம் கொடுக்க நாம் முயல வேண்டும். அதோடு, தொழில் அபிவிருத்திக்கு மின்சாரம் கொடுப்பதில் இன்னொன்று சொல்ல ஆசைப்படுகிறேன். பெரிய நகரங்களிலேயே சுற்றிச் சுற்றி தொழில் மயமாக்கிக்கொண்டு போவதால் பல கஷ்டங்கள் இருப்பது மாத்திரமல்லாமல் அளவுக்கு மிஞ்சி கூட்டமும், அதனால் உண்டாகும் சிக்கல் மாத்திர மல்ல, கிராமங்களில்—ரயில் பாதைகள் புதிதாகப் போட வேண்டு

[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]
[18th August 1961

மென்றால் அது தனிப் பிரச்னை—எங்கெங்கு ரயில் பாதைகள் இருக்கின்றனவோ அங்கெல்லாம் மின்சார வசதி கொடுத்து தொழில் வசதிகளை, தொழில் நிலையங்களை, தொழிற்சாலைகளை பரவலாக்கும் முறையிலும் கவனம் செலுத்தினால், கிராமங்களில் சிறு சிறு மில்களாவது தொடங்கலாம்.

அதனால் தொழில் துறையும் மின்சாரத் துறையும் இணைந்த திட்டங்களாக இருக்க வேண்டும். மின்சார வசதி பெருகினால், தொழில் வசதி தானாகவே பெருகும், அதனால் பல இடங்களிலே பரவலாக உள்ள மக்களுக்கு நன்மைகள் ஏற்படும். இப்படி பரவலாக இருப்பது நாட்டுக்கு நல்லது. அந்தந்த வட்டாரங்களிலே உள்ள மக்களுக்கும் நல்லது. மலப் பொருள்களை ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்குக் கொண்டு போவதிலே சில கஷ்டங்கள் இருக்கலாம். இருந்தாலும் திட்டங்களை அமுல் நடத்துவதிலே நாம் அதிகமாக தீவிரம் காட்ட வேண்டும். ஆகவே இந்த பரவலான முறையில் நாம் அதிக கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

வெகுவாக இந்த மின்சார பட்ஜெட்டை அலசிப் பார்த்ததிலே அதிகக் குறைகள் இல்லாதது பெருமைக்குரிய விஷயமாகும். அது ஒரு பெரிய நல்ல சாதனையாகும். ஒருசில குறைகள் இருக்கின்றன. அவைகளை நீக்க வேண்டுமென்ற காரணத்திற்காக அவைகளை மட்டும் ஒன்றிரண்டு எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். குறைகளே இல்லாத நிர்வாகம் வீட்டிலேயும் இருக்காது. அதே போல் நாட்டிலேயும் இருக்காது என்று சொல்ல முடியாது என்ற முறையில் சில குறைகளை மட்டும் சொல்கிறேன். எந்த இடத்தில் விவசாயத்திற்கு மின்சாரம் கொண்டுபோக வேண்டுமென்றாலும் அதற்கு ஒரு பிரியாரிடி இருக்க வேண்டும். எங்கு அணைக் கட்டுகள் வசதியும், கிணற்றுப் பாசன வசதியும் இருக்கின்றதோ அந்த இடங்களுக்கு பம்புசெட்டுகள் வைப்பதற்கு நிச்சயம் பிரியாரிடி கொடுக்க வேண்டாம். ஆனால் வறண்ட பிரதேசங் களுக்கு முதலில் முக்கியத்துவம் கொடுக்கவேண்டும். என்னுடைய தொகுதியை மட்டும் நான் வறண்ட பிரதேசமாகச் சொல்லிக் கொள்ளவில்லை. என் தொகுதியைப் போன்ற பல தொகுதிகள் வறண்ட பகுதிகளாக இருக்கின்றன. எந்த வறண்ட பிர தேசங்களில் கிணற்றை நம்பி வசிக்கிறார்களோ, எந்த வறண்ட பிரதேசங்களில் கிணறுகள் காத தூரத்திற்கு ஒன்றாக இருக்கிறதோ அந்தப் பிரதேசங்களுக்கு ஒரு தனிப்பட்ட பிரியாரிடி கொடுப்பது என்று ஒரு திட்டம் போடவேண்டும். அதற்குப் பிரியாரிடி கொடுக்க முயற்சிகள் எடுத்துக் கொள்ள, எந்தெந்த இடங்களுக்கு முதலில் மின்சாரத்தைக் கொண்டு போவது என்பதற்காக எவ்வளவு சீக்கிரத்தில் ஒரு திட்டம் தயாரிக்க வேண்டுமோ அவ்வளவு சீக்கிரத்தில் ஒரு திட்டம் தயாரிப்பது நல்லது. 10, 15 ஆண்டுகளுக்கு என்று திட்டங்கள் போட்டுப் பயனில்லை. இந்த மாதிரி ஒரு ஸ்கீம் போடு

[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]
18th August 1961]

வதற்கு மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட இறுதியில் அல்லது நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில்தான் முடியும் என்று சொன்ஞலும் பலனில்லை. வறண்ட பிரதேசங்களுக்கு முதலில் பிரியாரிடி கொடுத்து, அங்கெல்லாம் மின்சாரத்தை கொண்டு செல்லுவதற்கான ஒரு திட்டத்தை, ஒரு ஸ்கீமை உடனடியாகத் தயாரிக்க வேண்டும். இதிலே தாமதம் இருக்கக் கூடாது. உடனடியாக ஸ்கீம் போட்டு ஓர்க் ஆர்டர் கொடுக்க வேண்டும். அப்படி ஓர்க் ஆர்டர் கொடுத்தவுடன், வேலையை உடனடியாகத் தொடங்க வேண்டும். அப்படி வேலை செய்யும்போது, ஒரு கிராமத்தில் வேலை ஆரம்பித்து, அந்த கிராமத்தில் வேலையை முடித்துவிட்டு, பிறகு அடுத்த கிராமத்திற்குச் செல்ல வேண்டும். அதோடு இதிலே லையன் இன்ஸ்பெக்டர், லையன் மென் போன்ற பலர் இந்த கன்ஸ்ட்ரெக்ஷன் மெயின்டனென்சிலே வேலை செய்கிருர்கள். இதிலே வேலை செய்யக் கூடியவர்களை இணைத்து சிறிய சிறிய வட்டாரங்களாக்கி வேலை செய்தால் வேலை இன்னும் துரிதமாக நடக்குமா என்பதைப் பரிசீலனை செய்ய வேண்டுமென்று மட்டும் நான் கேட்டுக் கொள்கிறேன். அந்த இலாகாவிலே வேலை செய்யும் அசிஸ்டெண்ட் என்ஜினியருக்கு ஒரு பெரிய வட்டாரத்தைக் கொடுக்காமல், ஒரு சிறிய வட்டாரத்தை மட்டும் இணைத்துக் கொடுத்தால், அந்த சிறிய வட்டாரத்திலே வேலை நன்கு நடைபெறுமா என்பதைப் பார்ப்பதற்காக ஒருசில இடங்களிலே மட்டும் சோதனைக்காக இப்படிச் செய்வதைப் பரீட்சித்துப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அணு மின்சாரத்தைப் பற்றிச் சொன்னுர்கள். இந்த அணு மின்சாரத்தைப் பற்றிச் சொல்லும்போது, சில சமயத்தில் இதிலே பிஞன்சியல் இம்பிளிகேஷன் இருப்பதாகச் சொல்கிருர்கள். என்ஞல் இந்த இடத்திலே தமிழிலேகூட சொல்ல முடியவில்லை. எங்களுக்கு தமிழ் வகுப்பு நடத்தினுல்கூட நல்லது. இதைப் பற்றிய பொருளாதார அமைப்பைப் பற்றிச் சொன்ஞல் எங்களுக்கு வசதியாக இருக்கும். ஒரு சமயம் இந்த அணு மின்சாரத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கு அளவிற்கு மிஞ்சிய செலவாகுமென்று சொல்லப்படுகிறது. மற்ருெரு சமயம், இத் திட்டத்தைக் கொண்டு வந்து ஏற்படும் நன்மையால், 2, 3 பங்கு அளவுக்கு அதிகப்படியான கட்டணத்தைக் கொடுப்பதற்கு விவசாயிகள் அஞ்சி ஒதுங்கிவிடுவார்களே என்று சொல்லப்படுகிறது. அடுத்ததிலே இந்த அணு மின்சாரத் திட்டம் தமிழ் நாட்டிற்கு இல்லாது போனுல், நம் நாட்டிற்குத் தேவைப்படுகிற அளவுக்கு மின்சார புரொடக்ஷன் அதாவது உற்பத்தி ஏற்படுத்துவது கஷ்டம் என்று சொல்லப்படுகிறது. இதைப் பற்றி கொஞ்சம் எங்களுக்குக் கற்பித்தால், சொல்லிக் கொடுத்தால் நலமாக இருக்கும். அப்போதுதான் எங்களுக்கும் அதைப்பற்றி ஒரளவுக்குப் பேசுவதற்கும் சௌகரியமாக இருக்கும். அணு மின்சாரத்தைக் கொண்டு வருவதினுல், அதிகப்படியாகச் செலவு இல்லாமல் இருப்பது நல்லது. இதைச் சர்க்காரினுல் செய்வதற்கு தாமதம்

[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]
[18th August 1961

ஏற்படுமானல், இத் திட்டத்தைத் தனியார் துறைக்கு விட்டால், பலர் இத்திட்டத்தைத் துரிதமாக முடிப்பதற்கு முன்வருவார்கள் என்று நினைக்கிறேன். அவர்கள் இதை மிகவும் துரிதமாகவும் செய்வார்கள். அவர்களுக்கு இத் திட்டத்தினல் நல்லது ஏற்படும் பட்சத்தில், இதைப் பூர்த்தி செய்வதற்கு உடனடியாக வருவார்கள். ஆகவே இந்த அணு மின்சாரத் திட்டத்தைப் பற்றி அதிகமாகப் பேசுவதற்கு, அதைப் பற்றின சாதக பாதகங்களைத் தெரிந்து கொண்டால் நலமாக இருக்கும்.

இந்த அணு மின்சாரத் திட்டத்தை நிறைவேற்ற முடியுமானல், அதற்கான அவசியம் நிச்சயமாக இந்தத் தமிழ் நாட்டிற்கு இருக்கும். நமக்கு இனிமேல் பெரிய பெரிய அணைக்கட்டுகள் கட்டுவதற்கு முடியாது. சிறிய கைத்தொழில்கள் விருத்திக்கும், குறிப்பாக கிராமக் கைத்தொழில்கள் அபிவிருத்திக்கும் பரவலாக மின்சாரத்தின் தேவை நமக்கு அவசியமாகிறது. அதற்கு இப்போதுள்ளதைப் போன்ற அளவுக்கு மின்சாரம் இருந்தால் போதாது. இப்போதுள்ளதைப்போல் இன்னும் பத்து பங்கு இருந்தாலும் நம் நாட்டு மக்களுக்குத் தேவையாக இருக்கிறது. ஆகவே மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் என்று சொல்லும் போது நம்முடைய நாட்டிலே அதுசமயம் வாழ்க்கைத்துறை எவ்வளவு உயருமோ, அந்த அளவுக்கு மின்சாரத்தின் தேவையும் அதிகப்படும். ஆகவே அந்த அளவுக்கு மின்சாரத்தை எப்படி நாம் பெறுவது, எந்த முறையிலே உற்பத்தி செய்து கொள்ளுவது என்பதையும் நாம் கவனிக்க வேண்டும். அந்த விஷயத்திலே நாம் சிறிய சிறிய நீர்வீழ்ச்சிகளைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். என்னுடைய பகுதியிலுள்ள சிறுமலை நீர்வீழ்ச்சியைப் பற்றி இன்வெஸ்டிகேஷன் செய்யப்பட்டதாகக் கேள்விப் பட்டேன். இதைப்போல் எல்லா இடங்களிலும் உள்ள நீர்ப் பாசனங்களை எல்லாம் சிறிய சிறிய நீர்வீழ்ச்சிகளையெல்லாம் பயன் படுத்திக்கொண்டு அங்கெல்லாம் சிறிய சிறிய ஜெனரேட்டார்கள் வைத்து அங்குள்ள மக்களுக்கு மின்சார வசதி செய்து கொடுக்கலாம், இதுபோன்று பல சிறு திட்டங்களை நிறைவேற்றி அவைகளையெல்லாம் இன்டக்ரேட் அதாவது இணைக்கலாம். நம்முடைய நாட்டிலும் வருஷத்தில் சராசரி வருமானம் 600 ஆக வேண்டுமானல் .அதற்கு எந்த அளவுக்கு தொழில் வளர்ச்சி ஏற்பட வேண்டும், அதற்கு எவ்வளவு மின்சாரம் தேவைப்படும், அதற்கு என்னென்ன திட்டங்கள் வேண்டும், அதற்கு எந்தெந்தத் திட்டங்களையெல்லாம் இணைக்கலாம் என்று பார்த்து அப்படி இணைத்து ஒரு திட்டம் போட்டால் நெருக்கடியைப் போக்க முடியும். இது பற்றி ஒரு முடிவு செய்யவேண்டும். அப்படிப்பட்ட ஒரு திட்டம் போடுவதற்கும் நமக்குத் தெரியும். ஆகவே நான் இந்த மின்சாரத் திட்டங்களை ஆதரிப்பதோடு மட்டுமல்ல, அவைகளைத் துரிதமாக நிறைவேற்றுவதிலும் பெருமை கொள்ள வேண்டும். இதுவரையில் இந்த இலாகாவால் விவசாயிகளுக்குப்

[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]
18th August 1961]

பல நன்மைகள், பல நல்ல காரியங்கள் செய்யப்பட்டிருப்பதை நாம் எல்லோரும் அறிவோம். இருந்தாலும் இன்னும் அதிகப் படியான மின்சாரத்தை நாம் உற்பத்திச் செய்வதற்கு முயற்சிக்க வேண்டும். ஆகவே அதற்கு இந்த மாதிரித் திட்டங்கள் போட வேண்டும். 15, 20 வருஷத் திட்டங்கள் போட்டு, நம்முடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொள்ள வேண்டும். அதற்கானத் திட்டங்களைப் போடவேண்டும். அணு மின்சாரத்தைப் பற்றி கடந்த ஐந்து வருஷங்களாகப் பேசிக்கொண்டு வருகிறோம். அதைப் பற்றியும் ஒரு திட்டவட்டமான அளவுக்குத் தெரிந்து கொள்வதற்கு, அதற்கும் ஒரு திட்டம் போட வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, நான் என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

SRI P. G. KARUTHIRUMAN : அவைத் தலைவர் அவர்களே, நமது மின்சார இலாகா அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கும் படியான வரவு செலவுத் திட்டத்தை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். இந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டங் களினாலே நமது தேசத்திலே மிகவும் உபயோககரமான அதிலும் கிராமப் பகுதிகளிலே இருக்கும்படியான மக்களுக்கு அதிகமான நன்மை கிடைத்திருக்கக்கூடிய ஒரு இலாகா எதுவென்று சொன்னால், அது மின்சார இலாகாவாகத்தான் இருக்க முடியும். இந்த மின்சாரம் பொதுவாக நாட்டிலே உள்ள எல்லா மக்களுக்கும் மிகவும் பயன் படுகிறது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலே சுமார் 1½ லட்சம் கிலோ வாட்டாக இருந்தது, இப்போது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே ஐந்தே முக்கால் கிலோ வாட்டாக உயர்ந்திருக்கிறது. பணத்தை எவ்வளவு தூரம் ஒதுக்கினாலும்கூட, அதற்கான திட்டங்கள் போட்டாலும்கூட, அதை நிறைவேற்றி வைக்கும்படியான பணியிலே அந்த இலாகா சம்பந்தப்பட்ட அதிகாரிகளும் தொழிலாளிகளும் உண்மையாகப் பாடுபட்டால் தான் அந்தக் காரியத்தை, அந்தத் திட்டத்தை நிறைவேற்றி வைக்க முடியும். பாக்கி மாநிலங்களிலே ஐந்தாண்டுத் திட்டங் களிலே பல கோடி ரூபாய் பணம் ஒதுக்கப்பட்ட போதிலும்கூட, அந்தப் பணங்களில் பெரும்பகுதி செலவழிக்கப்படாமல் இருக்கிறது. ஆனால் நம்முடைய தமிழ் நாட்டைப் பொறுத்த மட்டிலும் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களிலும் ஒதுக்கப்பட்ட தொகைக்கும் அதிகமாக அளவுக்குப் பணம் செலவழிக்கப்பட் டிருக்கிறது என்று சொன்னால், நம்முடைய மாநிலத்திலே உள்ள உயர்தர அதிகாரிகளும், கீழ்த்தர சிப்பந்திகளும் அது சம்பந்த மான தொழிலிலே ஈடுபட்டுள்ள ஏனைய மக்களும் எந்த அளவுக்கு ஒத்துழைத்திருக்கிறார்கள் என்பதைச் சொல்லத் தேவையில்லை. அவர்களைப் பாராட்டுவதும் மிகையாகாது. சட்டியிலே இருந்தால் தான் அகப்பையிலே வரும் என்று கிராமத்திலே பழமொழி சொல்லுவார்கள். மின்சார விஸ்தரிப்பு வேண்டும் என்று ஒரு பக்கத்தில் சொல்லிக் கொண்டிருந்தால் மட்டும் போதாது. மின்சார 10-30 a.m.
விஸ்தரிப்பு உற்பத்தியைப் பொறுத்துத்தான் இருக்க முடியும். 'ஜெனரேஷன்', அதாவது உற்பத்தி எவ்வளவுக்கெவ்வளவு

[Sri P. G. Karuthiruman] [18th August 1961

அதிகமாக இருக்கிறதோ, அதைப் பொறுத்துத்தான் கிராமப் புறங்களுக்கு மின்சாரம் விஸ்தரிக்க முடியும். மின்சார விநியோகம் சிறப்பாக அமைய முடியும். அதற்குத் தகுந்த முயற்சிகளை ஓரளவு செய்துகொண்டிருக்கிறார்கள். உற்பத்தியில் 20 அல்லது 21 சதவிகிதம்தான் மின்சாரம் விவசாயத்திற்குக் கொடுக்கப்படு கிறது. கிராமங்கள்தான் அதிகமாக இருக்கின்றன. கிராம விவ சாயிகள் முதல் ஐந்தாண்டுத் திட்டம், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவிலே ஒரு லட்சம் கிணறுகளுக்கு அதிகமாக மின்சாரம் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். ஒரு ஏகர் பூமிக்கு கிணற்றி லிருந்து மாடு, கவலை வைத்துத் தண்ணீர் இறைப்பதுவிட, உண்மையிலேயே இறைக்கும் செலவில் பணம் வெகுவாக மிச்ச மாகிறது. ஒரு ஏகர் பூமிக்கு 50 அடி கிணற்றிலிருந்து ஒரு தரம் ஜலம் இறைத்தால் ஒரு ஏழை விவசாயிக்கு ரூ. 5 செலவாகும். ஆயில் என்ஜின் வைத்து இறைத்தால் ரூ. 2½ செலவாகும். எலக்டிரிக் மோட்டார் வைத்து இறைத்தால் ஒரு ரூபாய்கூட ஆகாது, முக்கால் ரூபாய் தான் ஆகும். ஆகவே, கிராமங்களுக்கு மின்சார விஸ்தரிப்பு ஏற்படுத்துவதினால் மக்களிடையே தேசிய வருமானத்தை அதிகப்படுத்தி, அதே சமயத்தில் உற்பத்திச் செலவைக் குறைப்பதற்கும் ஏதுவாக அமைந்திருக்கிறது. ஒரு லட்சம் கிணறுகளுக்கு அதிகமாக மின்சார வசதி செய்து கொடுத் திருப்பதினால், ஒரு கிணற்றிற்கு ஒரு ஏழை விவசாயிக்கு ரூ. 300 மிச்சம். ஆகவே, மின்சாரம் கொடுத்து ஒன்றும் சாதிக்கவில்லை என்று எதிர்க்கட்சிக்காரர்கள் சொல்லுவதில் அர்த்தமில்லை. ஒரு லட்சம் கிணறுகளுக்கும் மேலாக மின்சாரம் கிடைத்து பயன் அடைந்திருக்கக்கூடிய விவசாயிகளுக்கு 3 கோடி ரூபாய் உற்பத்திச் செலவைக் குறைத்து, அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கு ஏதுவாக அமைந்திருக்கிறது என்பதை உறுதியாகச் சொல்ல முடியும். ஆகவே, கிராமத்திலே இருக்கக் கூடிய மக்களிடையே மூன்று கோடி ரூபாய் மிச்சமாகியிருக் கிறது. அந்த அளவுக்கு அவர்களுடைய உற்பத்திச் செலவு குறைந்திருக்கிறது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவில் சுமார் 1,16,000 கிணறுகளுக்கு மின்சாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 2 லட்சம் கிணறுகளுக்கு மின்சாரம் விஸ்தரிப்பதற்குத் திட்டமிடப்பட்டிருக்கிறது. அதற்கும் மின்சார விஸ்தரிப்பதற்குத் திட்டமிடப்பட்டிருக்கிறது. அதற்கும் அதிக மாக மின்சார விஸ்தரிப்பு செய்வதற்கு திட்டத்தில் இடம் அளித்தால்தான் மக்களுடைய குறை ஓரளவுக்கு நீங்கும். 5, 6 வருஷங்களுக்கு முன்னால் அக்ரிமெண்டு கையெழுத்துப் போடு வதற்கே பயந்து கொண்டிருந்தார்கள். யுத்த காலத்தில் சாமான் இல்லாத சமயத்தில் ஸ்கீம் சாங்ஷன் ஆகியும்கூட மின்சாரம் கிடைப்பதற்கு பல வருஷங்கள் ஆகும். அதுபோல சந்தேகம் அப்போழுது இருந்ததால், அக்ரிமெண்டு செய்துகொண்டு விட்டு எப்பொழுது கரண்டு வருமோ என்று ஏங்கிக்கொண்டிருக்க வேண்டிய நிலை இருந்தது. இப்பொழுது ஏற்பட்டிருக்கும் முன் னேற்ற வேகத்தைப் பார்த்தால் நிச்சயமாக வந்துவிடும் என்ற

18th August 1961] [Sri P. G. Karuthiruman]

நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது, அக்ரிமெண்டு செய்துகொண்ட பிறகு சீக்கிரம் கரண்டு வந்துவிடவேண்டும் என்று மக்கள் ஆவல் படுகிறார்கள்.

அதிலும், முக்கியமாக ஒரு கிராமத்தில் 10 கிணறுகளுக்கு மின் சாரம் கிடைத்துவிட்டு, பக்கத்தில் இருக்கும் 5 கிணறுகளுக்கு மின்சாரம் வரவில்லை என்றால், 10 கிணறுகளில் சாகுபடி செய்பவர் களுக்கு அதிகமாக நன்மை கிடைப்பதினால், 5 கிணறுகளுக்கு மின்சாரம் கிடைக்கவில்லையே என்ற குறையை மிகைப்படுத்திக் கூறுவதற்கு ஏதுவாக இருக்கிறது. எந்தப் பகுதியில் மின்சாரம் கொடுக்கப்பட்டாலும், அந்த இடத்திலே எல்லா கிணறுகளுக்கும் மின்சாரம் கிடைக்கும்படியாகச் செய்யவேண்டும். கோபியில் 1952-ம் வருஷத்தில் 3 கிராமங்களுக்குத்தான் மின்சாரம் கிடைத் திருந்தது. சீப் என்ஜினியர் அவர்கள் எடுத்துக்கொண்ட தீவிர முயற்சியினால் இப்பொழுது 75 கிராமங்களுக்கு மின்சாரம் கிடைத் திருக்கிறது. 75 கிராமங்களுக்கு வந்தாலும் கூட, இன்னும் மின்சாரம் வராமல் 15 கிராமங்கள் இருப்பதால், அதைப் பற்றித் தான் அதிகமாகப் புகார் செய்யக்கூடிய நிலைமை இருக்கிறது. ஏனென்றால் இதில் இருக்கும்படியான லாபம் தெரிகிறது, அதில் சௌகரியம் இருக்கிறது, அதனால் ஒரு தொந்தரவும் இல்லாமல் விவசாயம் நன்றாக நடத்த முடியும் என்று மக்கள் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். அதன் காரணமாக மின்சாரம் கிடைக் காத பகுதிகளுக்குச் சீக்கிரம் மின்சாரம் கொண்டு வருவதற்கு முயற்சி செய்வதால் மிகவும் நலமாக இருக்கும் என்று நினைக் கிறேன்.

கிணற்றுக்கு மட்டும் மின்சாரம் உபயோகப்படுத்துவது என்பது அல்ல. தொழிற்சாலைகளை எடுத்துக்கொண்டாலும் எத்தனையோ தொழிற்சாலைகள் பரவி இருக்கின்றன. விவசாய உற்பத்திக்கு இன்னும் அதிகப்படியான மின்சாரம் கொடுக்கப்பட வேண்டும். இப்பொழுது கொடுக்கக்கூடிய 22 சதவிகிதம் அல்லாமல் 40 சதவிகிதமாவது கிராமங்களிலுள்ள கிணறுகளுக்கு மின்சாரம் விஸ்தரிப்பதுபற்றி பரிசீலனை செய்து பார்த்தால், இப்பொழுது இருக்கும்படியான தேவையைப் பூர்த்தி செய்யமுடி யும் என்பதுதான் என்னுடைய யோசனை. 12,000 கிராமங்களுக்கு மின்சாரம் கொடுத்துவிட்டோம் என்று சொன்னால், கணக்கு எப்படி வைக்கப்படுகிறது என்றால் ஒரு கிராமத்திற்கு மின்சாரம் கொண்டு போகும்பொழுது வழியில் எந்த எந்த இடங் களில் கம்பங்கள் போடப்பட்டிருக்கிறதோ, கம்பிகள் இழுக்கப்பட் டிருக்கிறதோ அந்த இடங்களெல்லாம் மின்சாரம் வந்துவிட்ட தாகக் கணக்கில் சேர்க்கப்படுகிறது. 11,000 கிராமங்களுக்கு மின்சாரம் விஸ்தரிக்கப்பட்டிருப்பதாக அறிக்கையில் கூறப்பட் டிருக்கிறது. ஆனால் 11,000 கிராமங்களிலுள்ள பூரணமான தேவையை அது பூர்த்தி செய்யவில்லை. 11,000 கிராமங்களில் மின்சாரம் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது என்றால், அங்கெல்லாம் அதிகாரிகளும், அதில் சம்பந்தப்பட்ட லைன்மேன்களும் நடப்

பதற்கு உரிமை இருக்கிறது. ஆகவே, அந்த கிராமங்களில் இருக்கும்படியான எல்லா கிணறுகளுக்கும், தொழிற்சாலைகளுக்கும் மின்சாரம் கொடுக்கப்படுமேயானல், அதுவே ஒரு மாபெரும் சாதனையாக இருக்கும் என்பதில் சந்தேகம் கிடையாது.

கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்த அறிக்கையைப் பார்த்தால், பல இடங்களில் 'குரூபிங் ஸிஸ்டத்தை' நீக்கிக்கொண்டு வருவதாக அறிகிறோம். இந்த குரூபிங் ஸிஸ்டத்தினல் விவசாயிகளுக்குப் பெரிய அதிருப்தி ஏற்பட்டிருக்கிறது என்பதை வலியுறுத்திச் சொல்ல ஆசைப்படுகிறேன். குரூப்பிங் ஸிஸ்டம் என்றால், சில மணி நேரங்களுக்கு சில கிணறுகளில்தான் மின்சாரம் உபயோகித்துக்கொள்ளலாம், என்பது. அதிகாரிகளும் அதில் நியாயமாக நடக்கிறார்கள் என்று சொல்லமுடியாது. நல்லவர்கள் பலர் இருக்கலாம். ஆனல், ஒன்றிரண்டு பேர்கள் கெட்டவர்கள் இருப்பதால், அந்த இடத்தில் நடப்பதைப் பார்த்து மக்கள் சட்ட சபை அங்கத்தினர்கள் முதல் அமைச்சர்கள் வரை திட்டுவதைத் தான் நாம் கேள்விப்பட வேண்டியிருக்கிறது. சில இடங்களிலே 12 மணி நேரமும் இறைத்துக் கொண்டிருக்கிறது என்று புகார்கள் இருக்கின்றன. சில இடங்களிலே அம்மாதிரி கிடையாது. சில இடங்களில் நோட்டீஸ்கூடக் கொடுப்பது கிடையாது. எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் அதிகம். நோட்டீஸ் கொடுக்காவிட்டால் அவர்களுக்கு எப்படித் தெரியும்? ஆகவே, விவசாயிகளைப் பொறுத்தவரையிலே குரூபிங் ஸிஸ்டம் என்று வைத்துக் கொள்ளுவது இயலாத காரியம். காலையிலே ஆட்கள் நடவு நடுவதற்கு வரும் பொழுது கரண்டு இல்லை என்றால் யார் அவர்களுக்குக் கூலி கொடுப்பது? காலையிலே வருபவர்கள் எப்படி மாலையிலே வருவார்கள்? காலையிலே கரண்டு நிறுத்திவிட்டால் மாலையிலே அவர்கள் வருவதில்லை. ஆகவே, விவசாயிகளைப் பொறுத்த மட்டில் குரூபிங் ஸிஸ்டத்தை எடுத்தால்தான் நல்ல முறையிலே விவசாயம் செய்ய முடியும். அப்பொழுதுதான் விவசாயிகளுக்கு நன்மையாக இருக்கும் என்பதை நான் மிகவும் வலியுறுத்திச் சொல்லுகிறேன். அங்குள்ள அதிகாரிகள் சூபர்வைஸர்கள், கீழே இருக்கக்கூடியவர்கள் தவறுதலாக நடந்துகொண்டிருக்கிறார்கள் பல சமயங்களில் என்பதை எடுத்துக் காட்டியிருந்தாலும், நடவடிக்கை எடுப்பதுகூட மிகவும் தாமதப்படுகிறது. இதனல் அவர்கள் அரசியலிலேகூட ஈடுபடலாம் என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். ஒரு எம்.எல்.ஏ. இப்படிச் செய்தார், இன்னொரு எம்.எல்.ஏ. ஏன் செய்யவில்லை, அந்த எம்.எல்.ஏ. ஏன் அப்படி அநியாயம் செய்ய வேண்டும், எம்.எல்.ஏ-க்காக இரவு பகலெல்லாம் ஓடிக் கொண்டிருக்கிறது என்றெல்லாம் புகார்கள் சொல்லுவதில் ஈடுபடுகிறார்கள். ஆகவே, இந்த குரூபிங் ஸிஸ்டத்தை நீக்கி, எப்பொழுது வேண்டுமானலும் விவசாயிகள் தண்ணீர் இறைத்துக் கொள்ளலாம் என்ற நிலைமையைக் கொண்டுவரவேண்டும். இரவிலே விவசாயிகள் தண்ணீர் இறைக்க முடியாது. கைத்தொழில்களுக்கு

18th August 1961] [Sri P. G. Karuthiruman]

இரவு நேரத்தில்தான் மின்சாரம் எடுத்துக் கொள்ளவேண்டும் என்று சொல்லி கைத்தொழில்களுக்கு பெர்மிட் கொடுத்துவிட்டு, விவசாயிகள் பகல் 12 மணி நேரமும் மின்சாரம் உபயோகித்துக் கொள்ளலாம், இரவில் இல்லை என்ற நிலையை ஏற்படுத்திவிட்டால் கூட மிகவும் நன்ருக இருக்கும் என்பது என்னுடைய யோசனை.

உற்பத்திச் செலவு அதிகமாக ஏற்படக்கூடிய நிலையிலே அனல் மின்சாரம் ஏற்படுமோ என்று சக அங்கத்தினர் சௌந்திரம் ராமச் சந்திரன் அவர்கள் அச்சம் தெரிவித்தார்கள். இப்பொழுது இருக்கக்கூடிய சூழ்நிலையில், விவசாயிகளுக்கு 'டாரிப்' அதிகப் படுத்தக்கூடாது என்பது என்னுடைய தாழ்மையான அபிப் பிராயம். அதனுல் உற்பத்திச் செலவு அதிகமாகும். விவசாய மக்கள் அதிகமாக மின்சாரத்தை உபயோகப்படுத்திக்கொள்ள என் முன் வருகிருர்கள் என்ருல், உற்பத்திச் செலவு குறைவாக இருக் கிறது, அதில் சௌகரியம் இருக்கிறது என்ற காரணத்தினுல்தான்.

இதே பதினைந்து வருஷங்களுக்கு முன்னுல், மின்சார இலாகாவே கொண்டு வந்த காலத்தில், மக்கள் இவ்வளவு அக்கறை காட்ட வில்லை. காரணம் அன்று விவசாயிகள் உற்பத்திச் செலவு இந்த அளவில் இருக்கவில்லை. ஆகவே இன்றைக்கு விவசாயிகளை அதிகமாக ஊக்கப் படுத்த வேண்டிய அவசியம் இருக்கிறது. ஆகவே இன்றைக்கு இருக்கும் சூழ்நிலையை அனுசரித்து இந்த மூன்ருவது திட்ட காலத்திலாவது இரண்டு லட்சத்தை நான்கு லட்சமாக உயர்த்தியாக வேண்டும் என்று கூறிக்கொள்ளுகிறேன். அதோடுகூட, இந்த குரூபிங் லிஸ்டத்தையும் உடனடியாக, இந்தச் சட்டசபை முடிவதற்குள்ளாகவே எல்லாவிடங்களிலும் எடுத்து விட வேண்டும். அப்படிச் செய்வதானது மின்சார இலாகா செய்யும் ஒரு மாபெரும் சாதனையாக இருக்கும். கிராம மக்க ளுக்கு அது ஒரு வரப்பிரசாதமாக அமையும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

* **Sri V. SUBBIAH**: கனம் அவைத் தலைவர் அவர்களே, இன்றைக்கு மின்சார வரவு செலவுத் திட்டம் பற்றி விவாதிக்கும் போது, விவசாய மக்களுக்கு மின்சாரம் பெரும் அளவில் பயன் படுத்த விஸ்தரித்திருக்கிறேம் என்று சொன்னுலும், இன்றைக்கு கிராமங்களில் இருக்கும் நிலையில் விவசாயிகளுக்கும் மற்ற இண் டஸ்ட்ரீஸ்களுக்கும் மின்சாரம் வினியோகிப்பது பற்றி அதிகமான வித்தியாசம் இருக்கிறது என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அது மிகப் பயங்கரமான அளவில் இருந்து வருகிறது. விவசாயிகளுக்கு எத்தனையோ விதத்தில் தேவைகள் இருக்கின்றன. மின்சாரம் உபயோகிப் பதனுல், ஆயில் பம்புசெட்டுகளைவிட, எருதுகளைக் கட்டி இறைப் பதைவிட செலவு கஷ்டம் குறைந்திருந்தாலும், மின்சார சார்ஜ் களில் அதிகப்படியான வித்தியாசங்கள் இருக்கின்றன. அப்படி அவர்களது கஷ்டங்களைத் தனிப்பட்ட முறையில் கவனித்துச் செய்ய இரண்டு வித போர்டுகள் அமைத்தாலும் நலமாக இருக்கும். விவசாயிகளுக்கு என்று ஒரு தனிப்பட்ட போர்டும்

மற்றதற்கென்று ஒரு போர்டும் இருந்தால்தான் விவசாயிகளுக்கு நன்மை அளிக்க முடியும். விவசாயிகளுக்கும் மற்றவர்களுக்கும் கிராமங்களில் மின்சாரம் நிறையத் தேவை இருக்கிறது. கிராமக் கைத்தொழில்களுக்கும் எங்கு பார்த்தாலும் மின்சாரம் தேவைப் படுகிறது. அப்படி அந்த அளவுக்கு அவர்களுக்கு மின்சாரம் கொடுக்க வேண்டும் என்னும்போது, இன்றைக்கு, இருக்கக்கூடிய முறைகளில் பல தொல்லைகளும், கஷ்டங்களும் அவர்களுக்கு இருக் கின்றன. அதைப்பற்றிக் கொஞ்சம் குறிப்பிட விரும்புகிறேன்.

குரூபிங் ஸிஸ்டத்தைப் பற்றி பல மதிப்பிற்குரிய நண்பர்கள் குறிப்பிட்டுப் பேசினார்கள். குரூபிங் ஸிஸ்டத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது, இந்த அறிக்கையில், ட்ரான்ஸ்பார்மர்களின் திறன் உயர்ந்ததும் குரூபிங் கட்டுப்பாடுகளை நீக்கும்படி உத்தரவு இடப்பட்டுள்ளதாகக் கண்டிருக்கிறது. ஒரே மைலில் உள்ள சில பகுதிகள் ராமநாதபுரம் ஜில்லாவில் இந்த கட்டுப்பாட்டிலிருந்து விலக்கப்பட்டிருக்கிறது. அதே சமயத்தில், பக்கத்திலுள்ள பகுதியில் அது நீக்கப் படவில்லை. ஸ்ரீவில்லிபுத்தூர், சாத்தூர் முதலிய இடங்களில் 1959-லிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பகுதிகள் ஒன்றுக்கொன்று பிற்பட்ட பகுதி அல்லது வேறு வித்தியாசமானது என்று சொல்ல முடியாது. அவையெல்லாமே கசல் பிரதேசம். ஒரு காலத்தில் அவை எல்லாம் ஒரே ஜில்லா வாகக்கூட இருந்தது; சாத்தூர், அருப்புக்கோட்டை முதலிய பிராந்தியங்கள். பரீட்சார்த்தமாக எடுத்துக் கொள்ளப்பட்ட திட்டப்படி, அது 1959-ல் எடுக்கப்பட்டிருந்த போதிலும், இன்னும் இந்தக் கட்டுப்பாடு எடுக்கப் படவில்லை. இது நியாயமா, விவசாயி களுக்கு அது உகந்ததா என்று யோசித்துப் பார்க்க வேண்டும். அதனால் ஏற்படும் கஷ்டங்கள் எவ்வளவு என்பதைப் பார்க்க வேண்டும். அது சம்பந்தமாக இந்தச் சபையில் பல முறைகள் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

மேற்கொண்டு, இந்த மின்சார வினியோகத்தில் அன்-கனெக்டட் மினிமம் சார்ஜ்ஜை எடுத்து விட்டதை வரவேற்றாலும், இன்னும் அவர்களுக்கு எத்தனையோ கஷ்டங்கள் இருக்கின்றன. பத்து வருஷ அக்ரிமெண்டைக் கொடுத்திருப்பதின் காரணத்தினால், அந்த அக்ரிமெண்டை வைத்துக்கொண்டு, ஒரு விவசாயி கரண்ட் சார்ஜ் ரூ. 100 தான் கட்ட வேண்டியிருந்தாலும், அந்த அக்ரிமெண்ட் பிர காரம் ரூ. 150 தான் கட்ட வேண்டும் என்கிறார்கள். அதன்படி அவன் உபயோகித்த கரண்ட் சார்ஜுக்கும் மேலாக ரூ. 50 கட்ட வேண்டியிருக்கிறது. அதைப் பார்த்தால், மின்சார வினியோகத் தில் விவசாயிகளுக்குச் சலுகையா காட்டுகிறோம்? அரசாங்கத் திற்கு இருக்கலாம், எலெக்ட்ரிக்சிடி போர்டுக்கு இருக்கலாம், அம் மாதிரி வசூல் செய்யப்படும் தொகைக்குச் செலவு; அவர்கள் நிறையக் கடன் வாங்கி, வட்டி கொடுக்க வேண்டியிருக்கிறது. ஆகவே இம்மாதிரி விஷயங்களையும் கவனத்தில் கொண்டு விவசாயி களுக்குச் சலுகைகள் அளிக்க வேண்டும்.

18th August 1961] [Sri V. Subbiah]

இன்றைக்கு மின்சார சர்சார்ஜ், மீட்டர் சார்ஜ் இவைகளைப் பார்க்கும்போது பயங்கரமாக இருக்கிறது. உற்பத்திப் பொருள்களின் விலைவாசிகளோ, குறைந்திருக்கின்றன. பணப் பொருள்களான மிளகாய், பருத்தி போன்றவைகளுக்கும் மார்கெட்டில் குறைந்த விலைதான். ஆனால், இன்றைக்கு மின்சார சார்ஜ்களைமட்டும் உயர்த்திக் கொண்டே போனால், அது அவர்களுக்கு நன்மை செய்வதாகக் கூற முடியாது. இந்த மின்சார சார்ஜுகளில் விவசாயிகளுக்கும், இண்டஸ்ட்ரிகளுக்கும் கொடுப்பதில் மிகுந்த ஏற்றத்தாழ்வுகள் இருக்கின்றன. அதை ஓரளவு குறைக்க வேண்டும். அப்படிக் குறைக்காவிட்டால் நிலைமை மோசமாகிவிடும்.

இன்னும் விவசாயிகள் மின்சார மோட்டார்கள், ஸ்பேர் பார்ட்டுகள் வாங்கப் படும் கஷ்டம் சொல்லி முடியாது. அவர்கள் முன் அட்வான்ஸ் பணம் கட்டியிருப்பதைப் பார்த்தால், நாட்டிலே இவ்வளவு நன்மைகளைச் செய்யும் அரசாங்கத்தால் இந்த விஷயத்தில் ஒன்றுமே செய்ய முடியாமல் இருப்பது வருந்தத்தக்க விஷயம். பெரிய பாக்டரிகளை அமைத்து மின்சாரக் கருவிகளை மோட்டார்கள், ஸ்டார்ட்டர்கள், இன்னும் எத்தனையோ கருவிகளைச் சர்க்காரே உற்பத்திசெய்து, விவசாயிகளுக்குக் குறைந்த விலையில், கிடைக்கும் அளவில் ஏன் உற்பத்தி செய்யக் கூடாது? இன்னும் பலவிதமான சம்பவங்கள் ஏற்படுகின்றன. காயில்கள் பர்ன் ஆகின்றன. எப்படி என்று அவர்களுக்குத் தெரிவதில்லை. இப்படியெல்லாம் பொறுப்பில்லாத முறையில் பல கம்பெனிகள் உற்பத்தி செய்கின்றன. ஆகவே இம்மாதிரிக் கருவிகளை அரசாங்கமே பெரிய பாக்டரியை அமைத்து உற்பத்தி செய்ய முன்வர வேண்டும்.

தனியார் துறையில் இயங்கும் கம்பெனிகள் இன்னும் பல இருக்கின்றன. திருநெல்வேலி, தூத்துக்குடிப் பகுதிகளில் ஒரு மின்சாரக் கம்பெனி இருக்கிறது. கால வரம்புக்கு முன்னதாக எடுக்க முடியவில்லை என்ற காரணமாக இருக்கலாம். பல கிராமங்களுக்கும் மின்சார போர்டே விஸ்தரித்தாலும், இந்தக் கம்பெனிகள் இயங்குமிடங்களில் அது மோசமாக இருக்கிறது. ஆகவே அவற்றை உடனடியாக நீக்கிவிட்டு, அந்த இடங்களிலும் மின்சார போர்டே வேலைகளைச் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். லைசென்ஸ்தார்களை வைத்துக் கொண்டிருப்பதனால் கிராமத்தார்களுக்குப் பல கஷ்டங்கள் இருக்கின்றன. கிராமங்களில் தெரு விளக்குக்கான மின்சாரக் கட்டணம் நகரங்களில் விதிக்கப்படும் விகிதத்திலேயே இருந்து கொண்டிருக்கிறது. கிராமத் தெரு விளக்குகள், விவசாயிகள் வீட்டில் உபயோகிக்கும் விளக்குகள் இவைகளுக்கான மின்சாரக் கட்டணம் நகரத்தைவிடக் குறைவாக இருக்க வேண்டும். நகரங்களில் விதிப்பதில் பாதிக் கட்டணம் கிராமத்தார்களிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம். காரணம், நகர மக்கள், கிராம மக்கள் இவர்களுக்கிடையே இருக்கும்

[Sri V. Subbiah] [18th August 1961

பொருளாதார ஏற்றத் தாழ்வு மலைக்கும் மடுவுக்கும் போல் இருக்கிறது. நாளைக்கு எட்டு மணி நேரம் வேலை செய்யக்கூடிய ஒரு நகரவாசி ஐந்து ரூபாய் சம்பாதிக்கிறான். ஆனால், நாளைக்குப் பத்து மணிக்குக் குறையாமல் உடல் உழைப்பினால் வேலை செய்யக் கூடிய கிராமவாசி ஒரு ரூபாய் சம்பாதிக்கிறான். அந்த நிலைமையை ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும். ஆகவே, கிராமங்களில் மின்சாரத்திற்குக் குறைந்த அளவு கட்டணம் விதிக்க வேண்டுமென்று தெரிவித்துக் கொள்கின்றேன்.

கிராமங்களில் விவசாயிகள் இன்னும் கஷ்டம் அடைகிறார்கள். எங்கள் பகுதியில் சில இடங்களுக்கு மின் சாரம் வந்திருந்தாலுங்கூட, அனேக இடங்களுக்கு இன்னும் வர வேண்டியிருக்கிறது. அங்கே ஆழமான கிணறுகள் தோண்ட வேண்டியிருக்கின்றன. இருபது கெஜம், 30 கெஜம் ஆழத்திற்குக் கீழ்வரை தோண்டினால்தான் தண்ணீர் வருகிறது. அங்கெல்லாம் மின்சார வசதி செய்துகொடுக்கப்பட வேண்டும். வறண்ட பிரதேசமாகிய அந்தப் பகுதிகளில் இன்னும் பல லைன்கள் பூர்த்தி செய்யப்படாமலிருக்கின்றன. ஈரச்சி, கச வன்குன்று முதலிய இடங்கள் வறண்ட பகுதிகள்; நல்ல உழைப் பாளிகள் இருக்கக்கூடிய இடம்; அந்தப் பகுதிகளிலும் மின்சாரம் கிடைக்கவில்லை. ஒரு லட்சம், 30 ஆயிரம் ரூபாய் எஸ்டிமேட் ஆகிறது, ஹார்ஸ் பவர் குறைவாக இருக்கிறது என்று சொல்லி, கனெக்ஷன் கொடுக்காமலிருப்பதாகப் புகார் சொல்கிறார்கள். சங்கரன்கோவில் பகுதியிலும் பல கிராமங்களுக்கு மின்சாரம் கிடைக்கவில்லை என்று சொல்லப்படுகிறது. இதிலெல்லாம் துரிதமாகச் செயலாற்றுவதற்குக் கீழிருக்கும் அதிகாரிகளும், மேலிருக்கும் உயர்தர அதிகாரிகளும் கவனம் செலுத்த வேண்டும். கிராம விவசாயிகள் சொல்கிறார்கள், லஞ்சம் புகாத கமெர்ஷியல் இலாகாவாகிய மின்சார இலாகாவில் கூட லஞ்சம் புகுந்துவிட்டது என்று. அது எந்த அளவுக்கு உண்மை என்று தெரியாது. ஆனால், விவசாயிகள் மத்தியில் பேசப்படுகிறது. மின்சார இலாகாவில் கூட லஞ்சம் புகுந்துவிட்டதே என்று பேசுகிறார்கள். அதை அரசாங்கம் முக்கியமாகக் கவனிக்க வேண்டும். விவசாயிகளுக்காக இருக்கும் ஒரு முக்கிய இலாகாவிலே லஞ்ச ஊழல் புகுந்துவிட்டால் அது மிகக் கொடுமையாக இருக்கும். குரூபிங் ஸிஸ்டம் இருப்பதால் பல இடங்களில் லஞ்சம் வந்துவிட்டது என்று விவசாயிகள் சொல்கிறார்கள். அங்கிருக்கும் லைன்மென் முதல் மற்ற சிப்பந்திகள்கூட 'பீஸ்' உருகிவிட்டதாகச் சொல்லுவதாகவும், அதற்காகக்கூட லஞ்சம் கொடுப்பதாகச் சொல்லப்படுகிறது. விவசாயிகளுக்காக இருக்கும் ஒரு நல்ல இலாகா இது. இதிலே கூட லஞ்ச ஊழல் வருகிறது என்றால் அது மிகவும் கண்காணிக்கப் படவேண்டிய விஷயம். இதில் அரசாங்கம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்பதை கனம் அமைச்சர் அவர்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.

18th August 1961] [Sri V. Subbiah]

மேலும், தொழிலுக்கும் விவசாயத்திற்கும் மின்சாரம் வழங்குவதில் கட்டணம் வசூலிக்கும்போது, அதிலே வித்தியாசம் இருக்க வேண்டும். விவசாயத்திற்குக் குறைவாகவும் தொழில்களுக்கு அதிகமாகவும் கட்டணம் வசூலிக்கலாம். நூற்பு ஆலைகளில் ஒரு யூனிட்டுக்கு நான்கு அல்லது ஆறு பைசா அதிகமாக விதித்தால், அதனுல் அதிக நஷ்டம் வந்துவிடாது. சினிமாக்கள், நூற்பு ஆலைகள், அரிசி, மாவு மிஷின் இவைகளுக்கெல்லாம் கட்டணத்தைக் கூடுதலாக்கிவிட்டு, அந்த அளவுக்கு விவசாயத்திற்காகக் கொடுக்கப்படுவதற்குக் கட்டணத்தைக் குறைக்க வேண்டும். தற்பொழுது மின்சாரக் கட்டணம் வசூலிக்கப் படுவதைப் பார்த்தால், 'பில்களிலே மீட்டர் சார்ஜ், சர்ச்சார்ஜ் என்று பலவாருகக் குறிப்பிடப் படுகிறது. இதெல்லாம் இல்லாமல், நியாயமாக இருக்கும் அளவிலே, விவசாயிகளுக்குக் குறைந்த கட்டணத்தில் மின்சாரம் கிடைக்கும் முறையில் ஏற்பாடு செய்ய வேண்டும்.

கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள், பெரிய தொழிற்சாலை வைத்து நடத்துபவர்கள் ட்ரான்ஸ்பார்மர் போன்று வைத்துக்கொண்டிருப்பதனுல் இவர்களிடமிருந்து குறைந்த கட்டணம் விதிக்கப்படுகிறது, ஆனுல், விவசாயிகள் அப்படி வைத்துக்கொள்ள முடியாது என்று. இது சரியான வாதமல்ல. விவசாயிகளுக்கு எங்கே மூலதனம் இருக்கிறது? அவர்கள் எப்படி அவ்வாறு ட்ரான்ஸ்பார்மர் வைத்துக்கொள்ளமுடியும் என்பதை அரசாங்கம் யோசிக்க வேண்டும். ஆகவே, விவசாயத் துறைக்குக் குறைந்த அளவு கட்டணம் வசூலிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கின்றேன்.

* **SRI S. RAMAKRISHNA THEVAR**: கனம் தலைவர் அவர்களே இப்பொழுது கனம் மின்சார அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் வரவு செலவுக் கணக்கை ஆதரித்து ஒருசில வார்த்தைகள் கூற முன்வந்துள்ளேன். என்னுடைய தொகுதியை எடுத்துக் கொண்டால், 900 கிராமங்கள் கொண்ட என்னுடைய தாலுகாவில் இரண்டு கிராமங்களில்தான் மின்சாரம் வழங்கப்பட்டிருந்தது. இப்பொழுது குறுகிய காலத்தில், பிறவிக் குருடனுக்குப் பார்வை கிடைத்தால் அவனுக்கு எவ்வளவு ஆனந்தம் ஏற்படுமோ அந்த மாதிரி என்னுடைய தொகுதியில் பல கிராமங்களுக்கு மின்சாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. மற்ற கிராமங்களுக்கும் கொடுப்பதற்குரிய வேலைகள் செய்து வருகிறுர்கள். மிகவும் துரிதமான முறையில் மின்சார விஸ்தரிப்பு செய்து வருகிறுர்கள். ஏற்கனவே விஸ்தரிக்கப்பட்ட இடங்களில் கனம் அம்மையார் அவர்கள் சொன்ன மாதிரி, அங்கங்கே கிடைக்கக்கூடிய சவுக்குக் கம்புகள் பனை மரங்கள் முதலியவைகளை உபயோகப்படுத்திக்கூட விஸ்தரிப்பு வேலையை நிறைவேற்றுவதற்குத் திட்டம் வகுத்துச் செய்தார்கள். இப்பொழுதுகூட பெரும் பகுதியான கிராமங்களிலே மின்சார லைனை விஸ்தரிக்கும் வேலை நடந்து கொண்டிருக்கிறது. தற்காலிகமாக அங்கங்கே கிடைக்கக்கூடிய சாதனங்களை உப

[Sri S. Ramakrishna Thevar] [18th August 1961

யோகப்படுத்தி கனெக்ஷன் கொடுத்து விட்டாலும், இப்பொழுது அங்கெல்லாம் நிரந்தரமான முறையில் ஏற்பாடு செய்து, நல்ல முறையில் அந்தக் காரியங்களைச் செய்து வருகிறார்கள்.

மின்சாரம் என்றால் என்ன என்பதைக்கூட அறியாத பகுதியில் இந்த மின்சாரம் கிடைத்தவுடன் மற்ற கிராம மக்களும் தங்கள் பகுதிக்கு மின்சாரம் வருவதற்கு மிகவும் துரிதமான முறையில் வேலை செய்து வருகிறார்கள். அதற்கும் உரிய ஏற்பாடுகளைச் செய்து கொடுக்கிறார்கள். இந்த மின்சாரத்தினால் என்ன பலன் அடைந்திருக்கிறோம் என்று மின்சாரம் கிடைத்த கிராம மக்கள் மற்றவர்களுக்கும் எடுத்துச் சொல்ல வழிகாட்டியாக இருக்கிறார்கள். இதனால் துரிதமான முறையில் என்னுடைய பகுதியில் இந்த வேலை நடப்பதைப் பற்றிப் பாராட்டாமல் இருக்க முடியாது. பொதுவாக, மின்சாரத் துறை அமைச்சர் அவர்கள் எங்கெங்கு முதலில் விஸ்தரிப்பு செய்யப்படவேண்டுமென்று கவனித்து, விவசாயத்திற்கு மின்சாரம் உபயோகப்படும் அளவுக்கு, கிராமம் கிராமமாகப் போய், ஆவன செய்துவருகிறார்கள். அங்கங்கே கேணி தூர்ந்திருந்தாலும், அதைச் செப்பனிடும் வகையிலும், கிராமங்களுக்கு மின்சாரம் விஸ்தரிக்கச் செய்வதிலும் அக்கறை எடுத்து, அந்தப் பகுதியில் இன்னும் ஒரு வாரம் தங்கப் போவதாகச் சொல்லி, அதற்குள்ளாக அந்தக் காரியங்களெல்லாம் நிறைவேறி விடவேண்டுமென்று தக்க உத்தரவிட்டு, நிறைவேற்றுவதில் பெரும் பிரயாசை எடுத்துக்கொண்டு அந்தக் காரியங்களைச் செய்து வருகிறார்கள். இப்பொழுது அந்தத் துறையில் இருக்கும் நிர்வாகஸ்தர்களும், அந்தப் பகுதிக்கு மின்சாரம் கிடைக்கச் செய்ய வேண்டும் என்பதிலே ஆர்வமுடையவர் என்ற முறையில் சொல்வேன், நல்ல முறையில் வேலை செய்கிறார்கள் என்பதைக் குறித்து அவர்களைப் பாராட்டாமல் இருக்க முடியாது. இரவு பகல் என்று பாராமல் ஓயாது அந்த இலாகா உத்தியோகஸ்தர்களும் அந்த வேலைகளைச் செய்து வருகிறார்கள்.

பொதுவாக நண்பர்கள் சொல்கிறார்கள், லஞ்சம் தாண்டவமாடுகிறது, லஞ்சம் நடக்கிறது என்று. மனிதனுக்கு ஆசை என்ற ஒன்று இருக்கும் வரை இந்தப் பிணி இருந்து கொண்டுதான் இருக்கும் என்பது என்னுடைய அபிப்பிராயம். அதைக் கண்காணிக்க அரசாங்கம் இருந்து கொண்டிருக்கிறது. அவைகளைப் பரிசீலித்து தக்க நடவடிக்கை எடுத்துக்கொண்டு வருகிறார்கள். முதலில் நல்ல சாமானைப் பார்த்து வாங்கி வரவேண்டுமென்று சொல்கிறார்கள், கெட்ட சாமான்களை யார் வாங்குவது? இதிலெல்லாம் கண்காணிப்பாக இருந்தால், இந்த வார்த்தை வருவதற்கே இடம் கிடையாது. பொதுவாக, லஞ்சத்தினால் எத்தகைய பெரிய உயர்
11-00 a.m. தர அதிகாரி உட்பட என்ன என்ன கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள், கஷ்டம் அடைந்திருக்கிறார்கள் என்பதை நமது அரசாங்கத்திலே தெரிந்து கொண்டிருக்கிறோம். அந்த நிலையில் சிறிய கம்பிகளை இழுக்கிறவர்கள், மரங்கள் நடுகிறவர்கள் இவர்களுக்கு எல்லாம் ஆசை இல்லாமல் இருக்கும் என்று நான் சொல்லவில்லை.

18th August 1961] [Sri S. Ramakrishna Thevar]

ஆசை ஏற்படத்தான் செய்யும். ஆனால் அரசாங்கம் எல்லாவகையிலும் பாதுகாப்பாக இருக்கிறது என்பது நம் எல்லோருக்கும் தெரியும். இருந்தாலும் குறை சொல்ல வேண்டும் என்று நினைக்கிறவர்கள் ஏதாவது குறை சொல்ல வேண்டுமே என்பதற்காக இதைச் சொல்கிறார்கள். இன்றையதினம் நமக்கு ஒளி கிடைத்துவிட்டது. பாதை தெரிகிறது. இருந்தும் இதற்காக நன்றி செலுத்திக் கொள்வதற்குப் பதிலாகக் குறைசொல்வது எந்தவகையிலும் பொருந்தாது என்று மட்டும் தெரிவித்துக் கொள்கிறேன். எதைவேண்டுமானாலும் பேசலாம் என்று பேசுவது பொருத்தமாக இல்லை என்று எண்ணுகிறேன். இன்றையதினம் லட்சக்கணக்கான கேணிகளுக்கு மின்சார பம்பு செட்டுகள் பொருத்தப்பட்டு ஏராளமான விவசாயிகள் நல்ல பலன் அடைந்து வருகிறார்கள். முதலில் துலா போட்டு இறைத்தார்கள். அதற்குப் பிறகு மாடு கட்டி இறைத்தார்கள். இப்போது ஒரு சிரமும் இல்லாது பட்டன் போட்டால் போதும், மின்சார உதவியினால் தண்ணீர் பாய்கிறது என்றால் அதுவும் மிகக் குறைந்த செலவில் இது மின்சார இலாகா செய்துவரும் அரிய நன்மை இல்லையா என்று கேட்கிறேன்.

அதுவும் போக்குவரத்து வசதி இல்லாத கிராமங்களுக்குக் கூட எப்படியோ சாமான்களை எல்லாம் கொண்டுபோய்ச் சேர்த்துவிடுகிறார்கள். கிராம சேவக்குகள் கிராமங்கள் தோறும் சென்று புள்ளிவிவரம் சேகரித்துக்கொண்டு வருகிறார்கள் என்றால் இவர்களும் கிராமங்கள் தோறும் சென்று பல நல்ல காரியங்களைச் செய்து வருகிறார்கள். அதற்காக அவர்களை எப்போதும் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்.

ஆனால் மின்சாரத்தினால் ஏற்படக்கூடிய நல்ல பயன்களை எல்லாம் இன்னும் கொஞ்சம் நாள் பொருத்திருந்துதான் பார்க்க வேண்டும். காரணம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதியில்தான் மின்சாரத்தை எங்கள் தொகுதியில் பார்த்திருக்கிறோம். இதுவரையில் சிறந்த நன்மைகளே ஏற்பட்டிருக்கின்றன. மொத்தம் தொள்ளாயிரம் கிராமம் கொண்ட தொகுதியில் இரண்டு கிராமங்களுக்குத்தான் மின்சாரம் இருந்தது. இப்பொழுது பல கிராமங்களுக்கு மின்சாரம் கொடுத்திருக்கிறார்கள். அங்கேயே பெரிய நிர்வாக ஆபீஸ் ஒன்று ஏற்படுத்த வேண்டும். அந்த நிர்வாகத்தை நன்றாகக் கவனித்து அந்தப் பிற்போக்கான பகுதி நல்ல வளர்ச்சி அடைய எல்லாவிதமான நடவடிக்கைகளையும் எடுக்கவேண்டுமென்று சொல்கிறேன்.

இப்போது இந்த மின்சாரத்தினால் சிறிய தொழில்கள் எல்லாம் நல்ல பலன் அடைந்து வருகிறது. இன்னும் இந்த மின்சாரத்தை விஸ்தரித்து லெவி அதிகமாகப் போகாமல்கூட எல்லோருக்கும் எல்லாத் தொழில்களுக்கும் நன்மை ஏற்படச் செய்யவேண்டும். என் தொகுதி நல்லமுறையில் பயன்படச் செய்யவேண்டும் என்று சொல்லிக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

[18th August 1961

* SRI J. MATHA GOWDER : கனம் சபைத் தலைவர் அவர்களே, மின்சார அமைச்சர் சமர்ப்பித்திருக்கும் இந்த அறிக்கையை வரவேற்று எனது கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். மின்சார இலாகாவானது நம்முடைய இந்திய நாட்டில் மூன்றாவது ஸ்தானத்தில் இயங்குகிறது என்று கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். மூன்றாவதாக இயங்குகின்றதை ஏன் முதலாவதாக இயங்கும்படிச் செய்யக்கூடாது என்று அங்கலாய்த்து கொள்கிறார்கள். இந்தியாவிலே இருக்கக்கூடிய மாகாணங்களில் மூன்றாவதாக நாம் வந்திருக்கிறோம், முதலாவதாக வரும் நிலையைப் பெறுவதற்கு நீங்கள் முயற்சி செய்யுங்கள், நாங்கள் முட்டுக்கட்டையாக இல்லாமல் இருக்கிறோம் என்ற தோரணையில் உற்சாகம் அளிக்கக்கூடிய வகையில் கூட இங்கே பேசப்படவில்லை. அன்டை மாகாணம் மாதிரி கூட்டுச் சேரக் கூடாதா என்று பேசப்பட்டது. பிற மாகாணத்தைப் பார்த்து காப்பி அடிப்பதும், கூட்டுச் சேருவதும் தமிழ்நாட்டு காங்கிரஸ் கட்சிக்கு இன்னும் ஏற்படவில்லை என்று சொல்லிக்கொள்கிறேன். தமிழ்நாட்டிலுள்ள இதர கட்சிகள் வேண்டுமானால் 62-ம் வருஷம் நெருங்க நெருங்க எதற்கெடுத்தாலும் கூட்டு சேருவதுபற்றி யோசிக்கலாம். 1962 வரை இப்படிக் கூட்டுச் சேருவதைப்பற்றியே தான் அவர்கள் பிதற்றிக் கொண்டிருப்பார்களோ என்று நினைக்கிறேன். அவர்களுக்கு ஜன்னி கண்டுவிட்டது. அதுவும் "சுதந்திராக் கட்சியைப் பார்த்து பயப்படுகிறீர்கள்" என்று ஒரு அங்கத்தினர் பேசுகின்றார். சுதந்திராக் கட்சி என்று ஒன்று இருப்பதாகவே எங்களுக்கு நினைவில்லை. இந்த நாட்டில் அது செத்து விட்டது என்றுதான் நாங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறோம். அப்படியிருக்க ஒருபக்கம் இவர்களே தனியார்துறையில் அதுவும் தனி மனிதனுக்குச் சுதந்திரம் வழங்கப்படவில்லை என்ற கூக்குரலை எழுப்பிவிட்டு மற்றொரு பக்கம் தனியார் துறையிலா மின்சார நிலையத்தை ஆரம்பிப்பது என்று பேசுவது ஒன்றுக்கொன்று பொருத்தமாகவே இல்லை. எங்களைப் பொறுத்தவரையில் அதுவும் தமிழ்நாடு காங்கிரஸ் கட்சியைப் பொறுத்த வரையில் எங்களுக்கு எந்தக் கட்சியைப் பார்த்தும் பயப்படவேண்டிய அவசியம் இல்லை. நாங்கள் கூட்டுச் சேரவேண்டிய அவசியமும் இல்லை என்று உங்கள் மூலமாகச் சொல்லிக் கொள்கிறேன்.

இந்த அறிக்கையிலே முதன் முதலில் 1908-ம் ஆண்டில் நீலகிரி ஜில்லாவில் காட்டேரியில் மின்சாரம் உற்பத்தி செய்யப்பட்டது என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதற்குப் பிறகு சென்னையிலே 1909-ஆம் வருஷம் தான் மின்சாரம் வந்தது. நீலகிரியில் இன்றைக்கு எடுத்துக் கொண்டாலும் கனடா தேச ஒத்துழைப்புடன்கூட மிகப் பெரிய திட்டமாகிய குந்தா திட்டம் முடிவாகும் தருவாயில் இருக்கிறது. வேறுநாட்டினர்கள் அங்கே வந்திருந்து அந்தத் திட்ட வேலைகளைப் பாராட்டியிருக்கிறார்கள். திட்ட காலத்திற்கும் முன்பே அந்தத் திட்ட வேலையை நமது மின்சார இலாகா என்ஜினியர்கள் முடித்ததற்காகப் பாராட்டியிருக்கிறார்கள். அப்படியிருக்கிறபோது இங்கே உள்ளவர்கள் எந்தக்

18th August 1961] [Sri J. Matha Gowder]

காரணத்தினுல் இந்த இலாகாவைக் குறை கூறுகிருர்கள் என்பது தான் எனக்குப் புரியவில்லை. வெளியிலே மேடையிலே வேண்டு மானுல் பேசிக் கொள்ளட்டும், அரசியல் கட்சியை வளப்படுத்து வதற்கு. ஆனுல் சட்டமன்றத்திலே பேசும்போதாவது அரசாங் கம் நன்ருக செய்திருக்கக்கூடிய காரியத்தையாவது பாராட்டி உற்சாகப்படுத்துவதை விட்டுவிட்டு இங்கேயும் மேடைப் பிரசங் கத்தைப்போல் பேசுவது உசிதம் அல்ல என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

காட்டேரி திட்டம்பற்றி கனம் அமைச்சர் அவர்களிடத்திலும் இதற்கு முன்பே இதே மன்றத்தில் நான் சொல்லியிருக்கிறேன். காட்டேரித் திட்டம் முதல் முதல் ஆரம்பிக்கப்பட்டும் செலவு அதிக மாகிறது என்ற காரணத்திற்காக கைவிடப்பட்டது. காட்டேரி யிலே மின்சார உற்பத்திற்கு தருவிக்கப்பட்ட மின்சாரக் கருவி களெல்லாம் அங்கங்கேயே இருக்கின்றன. மேல் காட்டேரியி லுள்ள பைப்புகள் மூலம் இன்றைக்கும் தண்ணீர் ஓடிக்கொண்டிருக் கின்றன. பைப்புகளெல்லாம் வெடித்துச் சிதறிக்கிடக்கின்றன. அவைகளை யெல்லாம் ஏன் வைத்திருக்கிருர்கள் என்று புரியவில்லை. இந்தத் திட்டம் கைவிடப்பட்டது என்று சொன்னுலும் அந்தப் பைப்புகளை அப்புறப்படுத்தி அவைகளை வேறு எதற்காவது உப யோகப்படுத்த முடியுமா என்று பார்க்க வேண்டும். அவைகள் எல்லாம் உடைந்து சிதறிக்கொண்டிருப்பதைப் பார்க்கும்போது எனக்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது. இது என்னுடைய தொகுதியில் இருக்கிறது. இங்கு இருக்கும் அதிகாரிகளைக் கேட்டால், அது மத்திய அரசாங்க நிர்வாகத்திலே இருக்கிறது, அவர்கள் அக்கறை எடுக்கவில்லை என்று சொல்லுகிருர்கள். அது மத்திய சர்க்காரைச் சேர்ந்திருந்தாலும்கூட அதை அந்தச் சர்க்காருக்குச் சொல்லி அவைகளை அப்புறப்படுத்த ஆவன செய்ய வேண்டும். காட்டேரி வாட்டர்பாலுக்கு வருகின்ற மண் அடைந்து விடுவதனுல் விவசாயம் செய்யக்கூடியவர்கள் பாதிக்கப் பட்டுவிடுகிருர்கள். ஏற்கனவே இதைப் பற்றி இந்த மன்றத்திலே யும் சொல்லியிருக்கிறேன். கனம் அமைச்சர் அந்த இடத்தைப் பார்வையிட்டும்கூட, நிலைமை அப்படியேதான் இருக்கிறது. அந்தத் திட்டத்தை என்ன செய்யலாம் என்று திட்டவட்டமாக ஒரு முடிவு செய்யவேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களைத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

நீலகிரி ஜில்லாவில் அபிவிருத்தித் திட்டங்கள் போடப்பட்டிருக் கின்றன. பாண்டியாறு புன்னம்புழா திட்டங்களை எடுத்துக் கொள்வதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. நீலகிரி மிகவும் சிறிய ஜில்லா. இந்த ஜில்லாவில் ஒரு திட்டத்தை எடுத்துக் கொள்ளும் போது அந்தத் திட்டத்தினுல் எவ்வளவு பூமி பாதிக்கப்படும், அதற்கு எவ்வளவு பூமி தேவைப்படும், எவ்வளவு நிலம் ஆர்ஜிதம் செய்ய வேண்டும் என்பதை எல்லாம் முதன் முதலில் கணக்கிட்டு, அந்த பூமியிலே யாராவது இருந்தால் அவர்களை முதலிலே அப்

புறப்படுத்துவதற்கும், அவர்களுக்கு வேறு பூமியைக் கொடுப்பதற்கு வழி என்ன என்று கண்டுபிடித்த பிறகு சர்வே செய்ய வேண்டும். அப்படியில்லாமல் முதலிலே திட்டம் ஆரம்பித்த பிறகு கிராம மக்களை வெளியேறுங்கள் என்று சொல்லும்போது பல சிக்கல்கள் உண்டாகின்றன. குந்தா திட்டம் காரணமாக நஞ்சா நாடு பகுதியில் அட்டுபாயில் கிராம வாசிகளைப்பற்றித் தெரிந்திருக்கும். அவர்களுக்கு எவ்வளவு சிக்கல் ஏற்பட்டது என்று சொல்லத் தேவையில்லை. திட்டத்தின் காரணமாகத் தண்ணீர் அந்த கிராமத்தைச் சூழ்ந்துகொண்ட பிறகு அந்த மக்கள் பயந்து கொண்டு அந்த கிராமத்தை விட்டு வெளியேறவேண்டி ஏற்பட்டது. அவர்கள் பூமியைக்கேட்டால் பாரஸ்ட் இலாக்கா நிலம் என்றும், ரெவின்யூ இலாக்கா நிலம் என்றும் பல காரணங்களைச் சொல்லுகிறோம். மாடு மேய்ப்பதற்கான இடம், மரங்களுக்கான இடம் என்று சொல்லி அங்கு இருக்கும் மனிதர்களுக்கு பூமி இல்லை என்று சொன்னால் அவர்கள் என்ன செய்வார்கள் என்று யோசிக்க வேண்டும். பாரஸ்ட் இலாக்கா பூமியாக இருந்தாலும் சரி, ரெவின்யூ இலாக்கா பூமியாக இருந்தாலும் சரி பாதிக்கப்பட்ட மக்களுக்கு வேண்டிய பூமியைக் கொடுத்து அவர்களுக்குச் சௌகரியம் செய்தால் சிக்கல் ஏற்படாது என்பதை இந்த இலாக்காவில் இருப்பவர்கள் புரிந்து கொள்ளவேண்டும். ஆகையால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உடனடியாக அவர்கள் கேட்கும் நிலத்தைக் கொடுப்பதோடு வீடு கட்டிக்கொள்வதற்கு வேண்டிய உதவிசெய்ய ஏற்பாடு செய்துவிட்டு அவர்களை அப்புறப்படுத்தவேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்து, திட்டத்தில் நாஞ்சா நாடு திட்டப் பகுதியில் பாலாடா திட்டத்தில் ஒரு அணை ஏற்படப்போகிறதென்று கேள்விப்படுகிறேன். அதை அமைச்சர் அவர்களும் என்ஜினீயர் அவர்களும் பார்வையிட்டு அணை கட்ட வேண்டிய நிலையில் இருக்கிறதென்று சொல்லியிருக்கிறார்கள். அந்தத் திட்டத்தினால் பாதிக்கப்படக் கூடிய மக்களுக்கு முதலில் என்ன செய்ய வேண்டும் என்பதை முடிவுசெய்து விட்டு அதன் பிறகு வேலை செய்ய ஆரம்பித்தால் நலமாக இருக்கும். அந்தத் திட்டம் கைவிடப்பட்டிருந்தால் அதைப்பற்றிப் பேசவில்லை. அந்தத் திட்டத்தை எடுத்துக்கொள்வதாக இருந்தால் ஆரம்பத்திலேயே நிலத்தை ஒதுக்கிவிட்டு வேலையை ஆரம்பிக்க வேண்டுமென்று பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன். நாடு சுதந்திரம் அடைவதற்கு முன்பு சராசரி 12 யூனிட் தான் இந்த நாட்டு மக்கள் மின்சாரத்தை பெற்றிருந்தார்கள். அது இரண்டாவது திட்ட முடிவில் 60 யூனிட்டாக உயர்ந்து இருக்கிறது என்பதைப் பார்க்கும்போது நம்முடைய நாடு எவ்வளவு துரிதமாக மின்சாரத்துறையில் மின்வேகத்தில் முன்னேறி இருக்கிறது என்பதைப் புரிந்துகொள்ளலாம். மேல் நாட்டில் அதிகமான அளவில் மின்சாரம் உபயோகிக்கிறார்கள் என்பதை குறிப்பிட்டு அந்த அளவிலே நாம் மின்சாரம் உபயோகிக்கவில்லையே என்று சிலர் சொல்லுகிறார்கள். நம் நாட்டின் நிலை என்ன ? மேல்

18th August 1961] [Sri J. Matha Gowder]

நாட்டின் நிலை என்ன என்பதைப்பற்றி சற்று சிந்திக்க வேண்டும். மூன்றுவது திட்டம் முடியும் தருவாயில் சராசரி 160 யூனிட் தமிழ்நாட்டிலுள்ள ஒவ்வொருவரும் மின்சாரம் பெறப் போகிருர்கள் என்பதைப் பார்க்கும்போது அது மிகவும் மகிழ்ச் சிக்குரிய விஷயம். அதைக்குறித்து மகிழ்ச்சி அடையவேண்டும். அதை விட்டுவிட்டு மேலைநாட்டோடு நம் நாட்டை ஒப்பிட்டுக் கொண்டிருப்பதில் பயன் இல்லை. நம் நாட்டு வசதியையும் மேல் நாட்டு வசதியையும் சிந்தித்துப் பார்க்காமல் மேலை நாடு மாதிரி நாம் முன்னேறவில்லை என்று மட்டும் நினைத்துக் கொண்டிருக்கக் கூடாது. தமிழ்நாடு மின்சாரத்துறையில் மின்வேகத்தில் திகழ் கிறது என்பதைக் கருதிப் போற்ற வேண்டியிருக்கிறது. வடநாடு வாழ்கிறது தென்னுடு தேய்கிறது என்று ஒருமனப்பான்மையில் பிதற்றிக்கொண்டு இருக்காமல் தமிழ்நாடு முன்னேறிக்கொண் டிருக்கிறது என்பதைச் சட்டமன்றத்திலாவது அவர்கள் சொல்ல வேண்டும். வெளியிலே எப்படிச் சொன்னபோதிலும் சட்ட மன்றத்தில் பேசும்போதாவது “தமிழ்நாடு மின்சாரத்துறையில் மின்வேகத்தில் முன்னேறிக் கொண்டிருக்கிறது” என்று சொல்லி கனம் அமைச்சர் அவர்களைப் போற்ற வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். எனக்கு முன்பு ஒரு அங்கத்தினர் பேசும்போது வேலைநிறுத்தம் செய்தவர்களைப் பழிவாங்கக்கூடிய நிலை இருக் கிறதென்று சொன்னுர்கள். நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன். மிகவும் அத்தியாவசியமான அதாவது எசன்ஷியல் சர்விஸ் என்று சொல்லக்கூடிய மின்சார இலாக்காவில் உள்ளவர்கள் வேலை நிறுத்தம் செய்யக்கூடாதென்று சட்டத்தைக் கொண்டுவந்து விட வேண்டும். தபால் இலாக்காவானது எசன்ஷியல் சர்வீஸ் என்று கருதப்பட்டு அந்த முறையிலே சட்டம் கொண்டு வந்திருக்கிறோம். தபால் இலாக்காவில் உள்ளவர்கள் வேலைநிறுத்தம் செய்வதனுல் பொதுமக்கள் எவ்வளவு பாதிக்கப்படுகிறுர்கள் என்பதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். அதுபோல் மின்சார இலாக்காவில் உள்ளவர்கள் வேலைநிறுத்தம் செய்துவிட்டால் அதனுல் அந்த நாட்டின் முன்னேற்றமே தடைபடுகிறது என்பதைக் கருத்தில் கொண்டு இத்தகைய வேலை நிறுத்தங்கள் செய்பவர்களுக்கு அங்கத்தினர்கள் யாரும் ஊக்கம் கொடுக்கக் கூடாது. அத்தகைய வேலை நிறுத்தத்தை அறவே ஒழிப்பதற்கு வேண்டிய வழிகளைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

செக்யூரிடி டெபாசிட் பற்றி சிலவார்த்தைகள் சொல்லவிரும்பு கிறேன். 12 ஆண்டு காலமாக செக்யூரிடி டெபாசிட் கட்டி தொடர்ச் சியாக மின்சாரம் உபயோகப்படுத்திக்கொண்டு ஒழுங்காக இருக் கும்போது 12 ஆண்டுகாலம் கழிந்து பிறகு மூன்று மாதங்களுக்கு முன்பு செக்யூரிடி டெபாசிட் எல்லாம் உயர்த்தப்பட்டு இருக்கிற தென்று சொல்லுகிருர்கள். இது எதற்காக என்று எனக்குத் தெரியவில்லை. ஏன் இது உயர்த்தப்பட்டது என்பதைப்பற்றி யாருக்கும் சொல்லத் தெரியவில்லை. உத்தியோகஸ்தர்களைக் கேட்டால் சர்க்காரிலே செக்யூரிடி டெபாசிட் உயர்த்தி விட்டார்கள் என்று சொல்லுகிருர்கள். சர்க்கார் பணம் வேண்டுமென்ற

[Sri J. Matha Gowder] [18th August 1961

நோக்கத்தோடு உயர்த்தினர்களா என்று புரியவில்லை. சாதாரண கிராம மக்கள்கூட வீட்டுக்கு மின்சாரம் எடுக்கும்போது ஏதோ 50 ரூபாய் செக்யூரிடி டெபாசிட் கேட்கிறார்கள். 12 ஆண்டுகள் கழிந்த பிறகு செக்யூரிடி டெபாசிட் உயர்த்திக்கொடுக்கவேண்டுமென்று சொல்லி அப்படிக்கட்டாவிட்டால் டிஸ்கனக்ஷன் நோட்டீஸ் வருகிறது. அதற்குப் பயந்துகொண்டு கட்டிவிடுகிறார்கள். இதைத் தவிர்க்க வேண்டும். மின்சார இலாக்காவானது வருவாய் நோக்கத்தோடு மட்டுமே இருப்பது அவ்வளவு நல்லதல்ல. உயர்ந்த வருவாயை எதிர்ப்பார்க்கவேண்டியதுதான், இருந்தாலும் சாதாரண கிராம மக்களுக்கு வீட்டு மின்சாரம் கொடுக்கும்போது செக்யூரிடி டெபாசிட்டை உயர்த்துவது அவசியம்தானா என்று சிந்திக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

மினிமம் காரண்டீ ஒரு ஊருக்கு மின்சாரம் விஸ்தரிக்கவேண்டுமென்று கேட்கும்போது 10 வருஷத்திற்கு மினிமம் காரண்டீ கொடுக்கவேண்டுமென்று இருக்கிறது. தொழிற்சாலையைப் பொறுத்தவரையில் மினிமம் காரண்டீ கொடுத்தால் கனக்ஷன் கொடுக்கிறோம் என்ற முறை முன்பு இருந்தது. காரணம் மின்சாரம் எடுத்துக்கொண்ட பிறகு வேண்டாமென்று சொல்லி விட்டால் இலாக்காவிற்கு அதனால் பணம் நஷ்டம் ஏற்படும் என்று அந்த நோக்கத்தோடு அந்த முறையை அப்போது கொண்டு வந்தோம்.

தொழிற்சாலைகளுக்கு மின்சார வசதி கொடுத்து அவர்கள் வேண்டாமென்று சொல்லிவிட்டால், உடனே அதை எடுக்க வேறு ஒருவர் தயாராயிருக்கிறார். எங்களுக்கு கனக்ஷன் இல்லையே என்று சொல்லிக்கொண்டிருப்பவர்கள் அதை எடுத்துக்கொள்ளத் தயாராயிருக்கிறார்கள். ஆகவே, இந்த மினிமம் காரண்டி வாங்க வேண்டிய அவசியமில்லை. ஐந்து ஆண்டுகள் ஒருவர் ஒரு தொழிற்சாலை நடத்தலாம், பின்னர் உண்மையாகவே அந்த தொழிலை நடத்தும் தொழில் அதிபருக்கு நஷ்டம் ஏற்பட்டு அந்தத் தொழிற்சாலையை மூட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறபோது, இந்த காரண்டியை பத்து வருடங்கள் கட்டிக் கொண்டு வாருங்கள் என்று சொன்னால் அவர் எப்படி கட்ட முடியும்? அதைக் கட்ட அந்தத் தொழிற்சாலைக் கட்டிடத்தை விற்றுத்தான் கட்டவேண்டும். ஆகவே ஒன்று அல்லது இரண்டு வருடம் காரண்டி எழுதி வாங்கினால் போதும், இதைச் சற்று சிந்திக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். சிறு சிறு தவறுகளினால் மக்களுக்கு கஷ்டம் ஏற்படுகிறது. மின்சார இலாகாவினர் பல தொல்லை கொடுக்கிறார்கள், எப்பொழுது பார்த்தாலும் பணம் கேட்கிறார்கள் என்று மக்கள் நினைக்கக் கூடிய நிலை மாறி மின்சார இலாகாவினால் நாடு வளம் பெற்றுக்கொண்டு வருகிறது, நாங்களும் மின்சாரத்தை உபயோகப்படுத்திக் கொண்டு வருகிறோம் என்ற ஆசை மக்களிடையே வளரச் செய்ய வேண்டும். அடுத்தபடியாக, தேயிலை. இதே மன்றத்தில் நான் அடிக்கடி சொல்லி வந்திருக்கிறேன், எந்தக் காரணத்தைக்கொண்டும் தேயிலை உற்பத்தி செய்யும் பாக்டரி

18th August 1961] [Sri J. Matha Gowder]

களுக்கு மின்சார வெட்டு இருக்கக்கூடாதென்று. தேயிலே உற்பத்தி செய்யும் பாக்டரிகளுக்கு மின்சார வெட்டு இல்லே என்றும் இங்கு சொல்லிவிட்டார்கள். ஆனல் சென்ற மே மாதம் ஒரு நோட்டீஸ் வருகிறது இலாகாவிலிருந்து. மழை இல்லாது தண்ணீர் குறைந்ததால், உங்களுக்கு 50 சதவிகிதம் மின்சார வெட்டு என்று நோட்டீஸ் கொடுக்கிருர்கள். அப்படி நோட்டீஸ் கொடுக்கும்போது, தேயிலே உற்பத்தியாளர்களுக்கு ஒரு பீதி ஏற்பட்டு விட்டது. சர்க்காரிலிருந்து, நிரந்தரமாக தேயிலே உற்பத்திக்கு வெட்டு இல்லேயென்று சொன்ன போதிலும் உத்தியோகஸ்தர்கள் நோட்டீஸ் கொடுக்கிருர்களே, காரணம் என்ன வென்று அறிய மந்திரிகளிடம் ஓடினர்கள். அதிர்ஷ்டவசமாக மழை பெய்ததால் வெட்டு இல்லேயென்று ஆகிவிட்டது. நோட்டீஸ் கொடுத்து, அதன் மேல் சர்க்காரிடம், அமைச்சர் அவர்களிடம், என்ஜினியர்களிடம் சொல்லி, தேயிலே உற்பத்தி செய்யும் பாக்டரிகளுக்கு வெட்டு இல்லே என்று உத்தரவு போடுவது வரையில் இரண்டு மூன்று நாட்கள் மின்சாரம் இல்லே என்று வரும்போது பல லட்சக்கணக்கான ரூபாய் நஷ்டம் ஏற்படுகிறது. தேயிலே அழுகும் பொருள். ஒரு நாளேக்குப்பக்குவப்படுத்தவில்லேயென்ருல் அந்தத் தேயிலே நாசமாகிவிடும். அதனல் லட்சக்கணக்கில் நஷ்டம் ஏற்பட்டுவிடும். ஆகவே, தயவு செய்து ஒரு "ஸ்டான்டிங் ஆர்டர்" போட்டு, தேயிலே பாக்டரிகளுக்கு எந்தக் காலத்திலும் மின்சார வெட்டு இல்லே என்று அதிகாரிகளிடம் சொல்லி, அடிக்கடி அவர்களுக்கு மின்சார வெட்டு வருகிறது என்று சொல்லி நோட்டீஸ் கொடுக்க வேண்டாம் என்று அவர்களுக்கு தெரியப்படுத்த வேண்டும், என்று கேட்டுக் கொண்டு எனக்கு இந்த சந்தர்ப்பத்தை அளித்த தலேவர் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

* SRI S. M. ANNAMALAI : சட்டமன்றத் தலேவர் அவர்களே, இந்த சட்டமன்றத்தின் முன்னல் வைத்திருக்கக் கூடிய மின்சார இலாகாவின் வரவு செலவுத் திட்டத்தைக் குறித்து நான் பேசுவதற்கு முன்னல், அந்த இலாகாவின் வரவு-செலவுத் திட்டத்தை நாம் மேலும் கூட்டுவதற்கோ அல்லது குறைப்பதற்கோ இந்த மன்றத்திற்கு அதிகாரம் கிடையாது. ஆண்டுக்கு ஆண்டு நாங்கள் பேசுகிற கருத்துக்கள், ஆண்டுக்கு ஆண்டு நாங்கள் சொல்லக் கூடிய ஆலோசனேகள், மின்சார இலாகா எவ்வித நடவடிக்கைகள் அதன் மேல் எடுத்து வருகிறது என்பதை எங்களால் தெரிந்து கொள்ள முடியவில்லே. வேறு மான்யங்கள் மீது பேசுகிறபோது நாங்கள் சொல்லக் கூடிய கருத்துக்களே, நாங்கள் சொல்லக் கூடிய காரியங்களே செய்யவில்லே என்று சொன்னல் அதைப் பற்றி இங்கு கேள்விகள் கேட்பதற்கு எங்களுக்கு உரிமையிருக்கிறது. ஆனல் இந்த இலாகாவை பொருத்தவரையில் அந்த உரிமை எங்களுக்கில்லே. அதைப்பற்றி கேள்விகள் கூட கேட்க உரிமையில்லே என்ற நிலே இருப்பதால் நாங்கள் சொல்கிற ஆலோசனேகள், நாங்கள் சொல்கிற கருத்துக்கள் இவைகள் மீது அந்த இலாகாவி

னர் என்னென்ன நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதைக் குறித்து அமைச்சர் அவர்கள் அடுத்த வரவு-செலவு திட்டத்திலாவது ஒரு அறிக்கை மேஜை மீது வைப்பார்கள் என்ற ஆவலோடு இதைச் சொல்லிக் கொள்கிறேன். அடுத்து, இந்த வரவு-செலவு திட்டம் குறித்து என்னைப் பொறுத்தவரையில் அந்த இலாகாவை நான் பாராட்டுவேனே தவிர அமைச்சர் அவர்களை நான் பாராட்ட முடியாது. அதற்கு மூன்றுவிதக் காரணங்களை என்னால் சொல்ல முடியும். ஒன்று, நமது மாநிலத்திற்கு அணுசக்தி மின்சாரம் தேவை என்று சென்ற ஆண்டு வரவு-செலவு திட்டத்தின்போது அமைச்சர் அவர்கள் அழகாக சொல்லியிருக்கிறார்கள். நாங்கள் சொல்ல வேண்டிய குறைபாடுகள் அத்தனையையும் மத்திய சர்க்காரிடம் சொல்லியிருக்கிறோம், அவர்களும் அதை நல்ல முறையில் கேட்டிருக்கிறார்கள், கூடிய சீக்கிரத்தில் அணுசக்தி மின்சாரம் நம் மாநிலத்தில் ஏற்படும் என்று அமைச்சர் அவர்கள் சென்ற ஆண்டு நம்பிக்கை தெரிவித்தார்கள். ஆனால் அந்த அணுசக்தி மின்சார நிலையம் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்படுமா என்றால் மூன்றாவது திட்டத்தில் சேர்க்கப்படாது என்று மத்திய அமைச்சர் அவர்கள் திட்ட வட்டமாக சொல்லி விட்டார்கள். நாலாவது திட்டத்தில்தான் அணுசக்தி மின்சாரம் தமிழ்நாட்டிற்கு கிடைக்கும் என்று அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அதைப் பார்க்கிறபோது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அணு சக்தி மின்சார நிலையம் நம் மாநிலத்தில் உண்டாகாது என்பதுபற்றி திட்டவட்டமாக சொல்லியிருந்தபோதிலும் கூட அமைச்சர் அவர்கள் அதில் மேலும் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். அடுத்து நம் மாநிலத்தைப் பொறுத்த வரையில், "ஹெவி இண்டஸ்ட்ரியல் எலெக்ட்ரிக்கல் குட்ஸ்', கன ரக மின்சாரக் கருவிகள் செய்யும் தொழிற்சாலை நம் மாநிலத்திற்கு தேவை தேவை என்று நமது மாநில அமைச்சர்கள் பல முறை மத்திய அரசாங்கத்தினிடத்தில் கூறி, மேலும் மேலும் முறையிட்டுக் கொண்டு வருகிறார்கள். அதுவாவது இங்கு ஏற்படுமா என்றால் அது கூட கிடையாது. அதை இரண்டாகப் பிரித்து ஒரு வகையை பக்கத்திலுள்ள ஆந்திரா மாநிலத்திலும் மற்றொரு வகையை தமிழ் நாட்டிலும் வைப்பதாக மத்திய அமைச்சரவர்கள் சொல்லியிருக்கிற கருத்தைப் பார்க்கிறபோது அதைக் கூட நமது மாநில அமைச்சர்களால் சாதிக்க முடியவில்லையே என்றால் அது உண்மையில் மிக, மிக வருந்தத்தக்கது. அடுத்து, மின்சார இலாகாவில் 40,000 தொழிலாளர்கள் இருக்கிறார்கள். இந்த 40,000 தொழிலாளர்களின் குறைபாடுகள், பே கமிஷன் ரிப்போர்ட் வந்து 14 மாதங்கள் ஆகின்றன; 14 மாதங்கள் ஆகியும் கூட அவர்கள் தொழிற்சாலைகளிலுள்ள தொழிலாளர்கள் இனத்தைச் சேர்ந்தவர்களா அல்லது சர்க்கார் அலுவலகங்களில் வேலை பார்க்கக் கூடிய என்.ஜி.ஓ. வகையைச் சேர்ந்தவர்களா என்று தெரியாது, அதுவும் இல்லாமல் இதுவும் இல்லாமல் திரிசங்கு சொர்க்கத்தில் இருப்பது மாதிரி இருக்கிறார்கள். அதனால் மின்சார இலாகாவில் வேலை செய்யும் தொழிலாளர்களின் மனப்

18th August 1961] [Sri S. M. Annamalai]

பான்மை நாளுக்குநாள் மாறிக் கொண்டு வருகிறது என்பதை இந்த சட்ட மன்றத்தின் முன் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இதைப் பார்க்கிறபோது, அந்த இலாகாவைப் பாராட்டலாமே தவிர அமைச்சர் அவர்களை என்றால் பாராட்ட முடியவில்லை. காரணம் இந்தக் குறைபாட்டை சர்க்கார் தீர்க்க வேண்டும். வேண்டுமானால் இந்த இலாகா சீப் என்ஜினியரை நான் மனமார பாராட்டுகிறேன். முதல் குந்தா திட்டத்திற்கு ஏறக்குறைய 12 கோடி ரூபாய் கனடா நாட்டிலிருந்து அவர்கள் பெற்றார்கள். இப்பொழுது இந்த மூன்றாவது திட்டத்தின்கீழ் ஏறக்குறைய 22 கோடி டாலர் அதாவது 11 கோடி ரூபாய் பெற்றிருக்கிறார்கள், என்பதினால் அவர்களையும், அந்த இலாகாவையும் நான் உண்மையில் பாராட்டுகிறேன். ஆனால் அமைச்சர் அவர்களை என்றால் பாராட்ட முடியாது. அடுத்து, இந்த வரவு-செலவுத் திட்டத்தில் சில குறைபாடுகள் இருக்கின்றன. கிராமப் புற மின்சார திட்டம் குறித்து இங்கு விளக்கமாகவும், விரிவாகவும் சொல்லப்படுகிறது. சென்ற ஆண்டு வரவு-செவுத் திட்டத்தில் ஏறத்தாழ 685 லட்சம் கிராமப்புற மின்சார திட்டத்திற்காக ஒதுக்கப்பட்டிருந்தது. இந்த ஆண்டு 573.33 லட்சம் தான் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதைப் பார்க்கிறபோது, கிராமப்புரங்களில் மின்சார விஸ்தரிப்புத் திட்டத்திற்காக ஒதுக்கக் கூடிய ரூபாய் ஆண்டுக்கு ஆண்டு குறைந்து கொண்டுதான் வருகிறது என்றுதான் சொல்ல முடிகிறது. கிராமப்புற மின்சார விஸ்தரிப்பில் அக்கறை காட்டப் படுகிறது என்று ஒத்துக் கொள்கிறேன். ஆனால் வரவு-செலவுத் திட்டத்தைப் பார்க்கிறபோது, பணம் மேலும் மேலும் குறைக்கப் படுவதைக் கண்டு நான் வருத்தப்படுகிறேன். அதேபோல் இப்பொழுது செலவு செய்யப்படும் மின் சக்தி எந்தஅளவிற்கு கிராமப் புறங்களில் பயன்படுகிறது என்றால் 100-ல் இண்டஸ்ட்ரியல் லோட்டுக்கு 50%, இரிகேஷன் அன்ட் அக்ரிகல்ச்சருக்கு 19% தான் கொடுக்கப்படுகிறது. ஆக, அக்ரிகல்ச்சர் அன்ட் இரிகேஷனுக்காக 19% தான் கிடைக்கிறது. இண்டஸ்ட்ரியல் லோட்-க்கு 56% செலவிடப்படுகிறது, என்று சர்க்கார் கொடுத்திருக்கும் அறிக்கையில் சொல்லப்பட்டிருக்கிறது. இதைப் பார்க்கும் போது, கிராமப்புறங்களில் மின்சாரத்தை விஸ்தரித்து விட்டோம் என்று பெருமைப்பட்டுக் கொள்வதில் பயன் இல்லை. கிராமப் புரங்களில், விவசாயத்திற்காக என்று இருக்கும் இந்த 19%-ஐ அரசாங்கம் மேலும் உயர்த்த வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதே சமயத்தில் இங்கே சொல்லப்பட்டிருக்கிற பெர் காப்பிட்டா கன்ஸம்ஷன் சென்ற ஆண்டு 36 யூனிட் என்றும் ஒரு ஆண்டுக்குள் 24 யூனிட் அதிகரித்திருக்கிறது என்றும் சொல்லப் பட்டிருக்கிறது இந்தப் புத்தகத்தில். பெர்காப்பிட்டா கன்சம்ஷன் அதிகரித்திருப்பதை நான் பாராட்டுகின்றேன். அப்படி பாராட்டுகின்ற போது இம்மாதிரியான பெர்காப்பிட்டா கன்சம்ஷன் கணக்கிடுகிற புள்ளிவிவரங்களையும் தர வேண்டும். 'ஸ்டாகர் பவர்'-ரை வைத்து கணக்கிடுகிறார்களா அல்லது மக்கள் உண்மையிலேயே உபயோகப்படுகின்ற அளவைப்பொறுத்து கணக்கிடுகிறார் 11-30 a.m.

களா என்பதை புள்ளிவிவரத்தோடு தயை கூர்ந்து தர வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். ஏனென்று கேட்டால் இதில் சொல்லப்பட்டிருப்பதைப் பார்த்தால் மிக மிக ஆச்சரியமாக இருக்கிறது. கழிந்த ஆண்டு 30 யூனிட் என்று இருந்தது இந்த ஆண்டு 60 யூனிட் என்று சொல்லப்பட்டிருப்பது, 24 யூனிட் ஒரே யடியாக உயர்ந்திருப்பது மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. ஆகவே இந்தக் கணக்கை எதை அடிப்படையாக வைத்து எடுத் திருக்கிறார்கள் என்பதை தயவு செய்து தெரிவிக்க வேண்டும் எனறு கேட்டுக்கொள்கிறேன்.

அதேபோலவே, வரவு-செலவுத் திட்டத்தில் மின்சார துறை யைப் பொறுத்தவரையில் 'சதர்ன் கிரிட்' ஏற்படுத்தப் போவதாக சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் நம்முடைய மாகாணத்திற்கு சாதகமா அல்லது பாதகமா என்பதைப்பற்றியும் இந்தப் புத்தகத் தில் சொல்லியிருக்க வேண்டும். இதைப்பற்றி மத்திய அமைச்சர் அவர்கள் சொல்லுகின்ற நேரத்தில் தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில் மூன்றாவது ஐந்தாண்டுத்திட்ட முடிவில், 'சதர்ன் கிரிட்' ஏற்பட்டு விடும், பின்னால் 'ஆல் இண்டியா கிரிட்' ஏற்பட்டுவிடும் என்று சொல்லியிருக்கிறார்கள். ஆகவே இதனால் லாபம் ஏற் படுமா அல்லது நஷ்டம் ஏற்படுமோ என்பதைப்பற்றி இந்தப் புத்த கத்தில் சொல்லியிருக்கலாம். அதே போன்றுதான் நாம் பிற மாகாணங்களுக்கு மின்சக்தி கொடுக்கிறோம், பிற மாகாணங்களி லிருந்து மின்சக்தியை பெறுகிறோம். இவ்விதம் நாம் பெறுகின்ற மின்சக்திக்கு கொடுக்கின்ற சார்ஜ் என்ன, நாம் கொடுக்கின்ற மின்சக்திக்கு விதிக்கின்ற சார்ஜ் என்ன, ஒரு யூனிட்டுக்கு எந்த அளவில் சார்ஜ் விதிக்கப்படுகிறது என்கின்ற புள்ளிவிவரங்களை யும் தர வேண்டும். பிற மாகாணங்களிலிருந்து வாங்குகின்ற மின் சக்திக்கு கிரயம் கூடுதலாகவும், நாம் கொடுக்கின்ற மின்சக்திக்கு கிரயம் குறைவாகவும் இருக்கிறது என்று நான் கேள்விப்படு கிறேன். இந்தப் புள்ளிவிவரங்கள் இந்தப் புத்தகத்தில் தந்திருந் தால் சட்டமன்ற உறுப்பினர்களாகிய எங்களுக்கு இதைப்பற்றி இன்னும் நன்றாக புரிந்து கொள்வதற்கு உதவியாக இருந்திருக் கும்.

அடுத்து, விவசாயத்தைப் பொறுத்தவரையில் கமர்ஷியல் பேஸிஸ்-ஸை எடுத்துக்கொண்டால் லாபகரமாய் இருக்கலாம். ஆனால் பொதுவாக விவசாயத்தைப் பொறுத்தமட்டில் லாபகர மாக இருந்தால் தான் திட்டங்களை புகுத்த முடியும் என்று சொல் வது அவ்வளவு முறையல்ல. அதிலும் சில மாவட்டங்களை பார் வர்ட் ஏரியா என்றும் சில மாவட்டங்களை பேக்-வர்ட் ஏரியா என்று பிரித்து வைத்திருக்கிறார்கள். அதோடு முற்போக்கான இடத்தில் ஒரு குதிரைவேக ஓட்டத்திற்கு 45 ரூபாய் என்றும் பிற்போக்கான இடத்திற்கு 35 ரூபாய் என்றும் நிர்ணயித்திருக் கிறார்கள். இதைப்பற்றி சென்ற ஆண்டு மின்சார அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஆனால் இன்னும் அமல் செய்யப்பட வில்லை. இதில் ஏன் காலதாமதம் ஏற்படுகிறது என்று கேட்ட

18th August 1961] [Sri S. M. Annamalai]

போது இதில் ஏற்படுகின்ற நஷ்டத்தை சர்க்கார் பணம் தரவில்லை என்று கேள்விப்படுகிறேன். அப்படியிருந்தால் இதைப் பற்றி தயைக் கூர்ந்து அமைச்சர் அவர்கள் சர்க்காரிலிருந்து போர்டுக்கு கொடுக்கவேண்டிய பணத்தை கொடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்து, இந்தத் திட்டத்தை உடனடியாக அமல் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு முற்போக்கு ஏரியா, பிற்போக்கு ஏரியா என்று பிரிக்கின்ற முறையைப் பார்க்கின்ற நேரத்தில் நன்ருக சிந்தித்துப் பார்த்து பிரிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதாவது இப்போது எங்கு மின்சார மோட்டார்கள் அதிகமாக இருக்கின்றதோ அவையெல்லாம் பார்வர்ட் ஏரியா என்றும் குறைந்த மோட்டார்கள் இருக்கின்ற இடத்தை பேக்வர்ட் ஏரியா என்றும் பிரித்து வைத்திருப்பதாக தெரிகிறது. இந்த முறையில் பிரித்து வைத்திருப்பதைப் பார்த்தால், முற்போக்கு ஏரியா என்று பிரித்திருக்கும் வட ஆற்காடு மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள் ஒரு குதிரை வேக ஓட்டத்திற்கு 45 ரூபாய் கொடுக்க வேண்டும். அதே சமயத்தில் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள் ஒரு குதிரை வேக ஓட்டத்திற்கு 35 ரூபாய் கொடுக்கவேண்டும். சர்தார் வேதரத்தினம் அவர்கள் தஞ்சை மாவட்டத்திற்கு மேலும் மின்சார விஸ்தரிப்பு வேண்டும் என்று கேட்டார்கள். அவர்களுக்கு இப்போதுள்ள முறைப்படிப் பார்த்தால் 35 ரூபாய் கொடுத்தால் போதும். அதே நேரத்தில் வட ஆற்காடு மாவட்டத்தை எடுத்துக்கொண்டால் செங்கம் தாலுகா, வந்தவாசி தாலுகா தவிர வேறு இடத்திலுள்ளவர்கள் 45 ரூபாய் கொடுக்கவேண்டும் என்றிருக்கிறது. இந்த நிலைமை மாற வேண்டும். பொருளாதார துறையில் எந்த மாவட்டம் பின்தங்கியிருக்கிறதோ அவைகளை கணக்கிட்டு பம்ப்செட்டு கொடுக்கவேண்டும். அந்த முறையில் கணக்கிட்டு வட ஆற்காடு மாவட்டத்திற்கு பம்ப்செட் தந்தால் வட ஆர்க்காடு மாவட்டம் மாவட்டத்திற்கு பம்ப்செட் தந்தால் வட ஆற்காடு மாவட்டம் பெருக்கிக்காட்ட தயாராக இருக்கிருர்கள். ஆகவே பார்வர்ட் ஏரியா, பேக்வார்ட் ஏரியா என்று பிரிக்கும்போது தயைக்கூர்ந்து இதைப்பற்றி நன்ருக சிந்தித்துப் பார்க்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். க்ரூப்பிங் ஸிஸ்டத்தைப் பொறுத்தளவில் இப்போது ராமநாதபுரம் மாவட்டத்தில் எடுக்கப்பட்டிருப்பதாகவும், சேலம் மாவட்டத்தில் சில கிராமங்களுக்கும் இந்தத் திட்டத்தை விஸ்தரித்திருக்கிருேம் என்றும் இந்த உரையில் சொல்லப்பட்டிருக்கிறது. அதை நான் வரவேற்கிறேன். ஆனல் ஆற்று நீர் பாசன வசதியில்லாத நிலையில் இருக்கும் வட ஆற்காடு, செங்கற்பட்டு, சேலம் போன்ற மாவட்டங்களில் இந்த க்ரூப்பிங் ஸிஸ்டம் உடனடியாக எடுக்கவேண்டும். ஒரு மாவட்டத்தில் மட்டும் கொண்டு வந்துவிட்டு மற்ற மாவட்டங்களுக்குப் பின்னல் பார்க்கலாம், பின்னல் யோசிக்கலாம் என்று சொல்வது அவ்வளவு நல்லதல்ல. ஆகவே உடனடியாக இந்த இடங்களில் க்ரூபிங் ஸிஸ்டத்தை எடுத்துவிட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மேலும், விவசாயிகளுக்கு கொடுக்கப்பட்டிருக்கும் சலுகைகளைப்

பற்றி இதில் சொல்லப்பட்டிருக்கிறது, இவைகளில் ஒன்றுகூட நல்ல முறையில் நடைபெறவில்லை. இந்த புத்தகத்தில் 20-வது பக்கத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.—அதில் "தங்கள் சக்திக்கு அப்பாற்பட்ட நிலைமைகள் காரணமாக மின்சாரம் உபயோகிப் போர் மின்சார சக்தியை முழுதுமாகவோ, ஓரளவுக்கோ பயன் படுத்த முடியாமல் போனால் குறைந்த பட்ச அல்லது விசேஷ உத்தரவாதத் தொகைகள் தள்ளப்படுகின்றன" என்று சொல்லப் பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட கேஸ்கள் எத்தனை தள்ளப் பட்டிருக்கின்றன என்று இதில் சொல்லியிருக்கலாம். ஆறு சலுகைகளை சொல்லியிருப்பதில் எதையாவது நல்லமுறையில் நடத்துகிறார்களா என்று பார்த்தால் ஒன்றுகூட இல்லை என்று சொல்லலாம். இதில் பலவிதமான குறைபாடுகள் இருக்கின்றன. கிணறுகளில் தண்ணீர் இல்லை என்று வரும்போது அதை அஸிஸ்டன்ட் இன்சினியர் அவர்களுக்குச் சொல்ல வேண்டும். வட ஆற்காடு மாவட்டத்தைப் பொருத்தவரையில் சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி இம்மாதங்களில்தான் கிணறுகளில் தண்ணீர் குறைந்து போகும். இதைப்பற்றி சொன்னால் அவர்கள் கார்த்திகை மாதங்களில் வந்து பார்ப்பார்கள். அப்போது தண்ணீர் இருக்கும். இப்படி மினிமம் சார்ஜ் தள்ளித்தரவேண்டும் என்று சொல்லி ஐந்தாறு மாதங்களுக்குப்பின்னால் வந்து பார்க்கிறார்கள். இதன் காரணமாக எந்த விதமான பயனும் ஏற்படுவதில்லை. இம் மாதிரி பல சலுகைகள் ஏட்டளவில்தான் இருக்கிறதே தவிர நடைமுறையில் ஒன்றுமில்லை. ஆகவே, இதிலிருக்கின்ற சிக்கல்களை எல்லாம் போக்குவதற்கு வழிவகை செய்யவேண்டும் என்று சீப் இன்சினியர் அவர்களை கேட்டுக்கொள்கிறேன். அப்போது தான் கிராமப்புறங்களிலுள்ள விவசாயிகள் பலனடைய முடியும். அதன் மூலம் உற்பத்தியையும் பெருக்க முடியும். ஆகையினால் இதில் வருகின்ற எல்லாச் சிக்கல்களையும் போக்கி இதில் குறிப் பிட்டிருக்கின்ற எல்லா சலுகைகளையும் உடனடியாக அமுல் நடத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

(The Chairman sounded the gong.)

மேலும், நாலைந்து பேர்களின் பெயரில் ஒரு கிணறு இருந்தால் அதற்கு சர்வீஸ் கனக்ஷன் கொடுக்க முடியாது என்று சொல்லி விடுகிறார்கள். இதை நீக்கிக் கொடுப்பதற்காக இன்டெம்னிட்டி பான்ட் கொடுத்து சர்விஸ் கொடுத்து வந்தார்கள். இந்த முறை ஓராண்டு காலமாக நடைபெற்றது. பின்னால் சரியானபடி கனக்ஷன் கொடுப்பதில்லை. அதே நேரத்தில் ஆயில் இன்சின் உபயோகித்து பலர் விவசாயம் செய்து வருகிறார்கள். நாலைந்து பேர்களின் பேரில் கூட்டாக இருந்தாலும், அதில் அரை எக்கர் உள்ள ஒருவர் ஆட்சேபம் செய்தாலும் சர்விஸ் கனக்ஷன் கொடுக்க முடியாது என்று சொல்லிவிடுகிறார்கள். இதனால் பலவிதமான கஷ்டங்கள் ஏற்படுகின்றன. இதைப்பற்றியும் சீப்-இன்சினியர் அவர்கள் ஆராய்ச்சிகள் செய்து நல்லதொரு முடிவை எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

18th August 1961] [Sri S. M. Annamalai]

அதைப் போலவேதான் ஷிப்டிங் சமாசாரமும், ஒரு கிணற்றிலிருந்து இன்னொரு கிணற்றுக்கு ஷிப்ட் செய்யவேண்டுமென்று, மாற்றித் தரவேண்டுமென்று சொன்னால், ஒரு விவசாயி தன்னுடைய நிலத்தையே விற்று பாப்பராகி போக வேண்டியது தான். அந்த அளவுக்கு அதில் கஷ்டம் இருக்கிறது. உதாரணத்திற்கு ஒன்று சொல்வேன். இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் எனது தொகுதியில் நடந்த சம்பவம் இது. கிணற்றில் தண்ணீர் இல்லை. பம்ப்செட்டை ஷிப்ட் செய்து தாருங்கள் என்று ஒரு விவசாயி இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் மனுப்போட்டார். இரண்டு ஆண்டுகளுக்கு 250 ரூபாய், 250 ரூபாய் ஆக 500 ரூபாய் கட்டுகிறாயா அல்லது ஜப்தி செய்யட்டுமா என்று நோட்டீஸ் வந்தது. அதன் பிறகு அவர் 500 ரூபாயை கட்டிவிட்டார். ஒரு கிணற்றிலிருந்து இன்னொரு கிணற்றுக்கு மாற்றுவதற்கு எவ்வளவு கொடுக்கவேண்டுமோ அதையும் சேர்த்து இது வரையில் 1,750 ரூபாய் கட்டிவிட்டார். மாற்ற வேண்டுமென்று கேட்டது சகாதேவ கவுண்டர் என்பவர், களம்பூரைச் சேர்ந்தவர். இரண்டு ஆண்டுகள் கழித்து, 1,750 ரூபாய் செலவழித்து கடந்த 7 நாட்களாகதான் சர்வீஸ் ஓடுகிறது என்றால் உண்மையில் மத்திய தர விவசாயிகள் பிழைக்க முடியுமா என்று சிந்தித்து பார்க்கவேண்டும். இந்த மாதிரி பல இடையூறுகள் இருக்கின்றன. 10 ஏக்கர், 7-8 ஏக்கர் வைத்திருக்கிற பெரிய விவசாயிகளுக்கு வேண்டுமானால் லாபம் இருக்கிறது. 2 ஏக்கர், 3 ஏக்கர் வைத்திருக்கிற மத்திய தர விவசாயிகள், சிறு விவசாயிகள் படுகிற அவஸ்தை இருக்கிறதே, அது அரசனை நம்பி புருஷனை கைவிட்டாளாம் என்று சொல்வார்களே, அதைப் போல அவர்கள் செலவழிக்கும் பணம் இருக்கிறதே அது அவர்களுடைய சொந்த நிலத்தையே விற்றுவிட்டு பாப்பர் ஆக வேண்டிய நிலையில் இருக்கிறது. தயவுசெய்து இப்படிப்பட்ட சிக்கல்களை எந்த இடத்தில் இருக்கிறது என்று அலசி, ஆராய்ந்து பார்த்து, மத்திய தர வகுப்பினர் இப்போது தான் முன் வருகிறார்கள் என்று அமைச்சர் சொல்லுகிறார்கள். ஊக்கம் வருகிறது என்று சொல்கிறார்கள். இப்போது தான் ஊக்கம் இருக்கிறது. மின்சாரம் தான் தங்கள் முதுகெலும்பு என்று சிறு விவசாயிகளும், மத்திய தர விவசாயிகளும் உணர்ந்திருக்கிறார்கள். இப்படி ஊக்கம் வருகிறபோதே இந்தப் பணம், அந்தப் பணம் கட்டவேண்டுமென்று சொன்னால் எப்படி அவர்கள் முன்னுக்கு வர முடியும்? இவர்களெல்லாம் ஏழைகள், கிராமப்புறங்களில் இருப்பவர்கள், அவர்களுக்கு என்னென்ன இடையூறுகள் இருக்கின்றனவோ அவைகளைத் தீர்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

வரவு-செலவு திட்டத்தில் சில திட்டங்களுக்காக திட்டம் போடுகிறார்கள். சந்தவாசல்-வெல்லூர் என்ற ஒரு திட்டத்திற்கு 2,41,500 ரூபாய் ஸாங்ஷன் வாங்கப்பட்டது. 1959-60-ல் ரூ. 1,78,393 செலவழிக்கப்பட்டதாக வரவு-செலவுத் திட்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. 1958-59-ம் வருஷத்தில் ஸாங்ஷன் வாங்கப்பட்ட தொகை ரூ. 2,41,500 என்றும் செலவிடப்பட்ட

தொகை ரூ. 1,78,495 என்றும் அந்த வரவு-செலவுத் திட்டத்தில் சொல்லப்பட்டிருந்தது. மேலும் தொடர்ந்து வேலே நடைபெற வில்லே. ஆனல் 1958-59-ல் செலவானது ரூ. 1,78,495 என்று சொன்ன தானது 1959-60-ம் ஆண்டில் சொல்லும்போது ரூ. 1,78,393 என்று குறைந்திருப்பதின் காரணம் என்ன? இது என்ன வரவு-செலவுத் திட்டம் என்று புரியவில்லே. இந்த மாதிரி குறைந்ததற்குக் காரணம் என்ன என்று இது சம்பந்தப்பட்ட பேப்பர்களேப் பார்த்து பரிசீலனே செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

SRI S. THANGAVELU : தலேவர் அவர்களே, மின்சார இலாகா அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் இந்த வரவு-செலவுத் திட்டத்தை ஆதரித்து இரண்டொரு வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். இந்த இலாகா வருவதற்கு முன்னர் ஒரு காலத்தில் கம்பெனியார் எடுத்து நடத்தியபோது ஒரு சில பேர்களுக்கு மின்சாரம் வினியோகிக்கப்பட்டது. சர்க்கார் இதை ஏற்ற பிறகு, அதிலும், தற்சமயம் இருக்கும் சீப் என்ஜினீயர் முதலியார் அவர்கள் பதவி ஏற்றது முதற்கொண்டு நல்ல முறையில் கிராமாந்திர விவசாயிகளுக்கு மின்சாரத்தை வினியோகிப்பதிலே நல்ல ஆர்டர்களே பிறப்பித்திருக்கிறர்கள் என்பதைப் பற்றி நான் மிகப் பெருமையோடு சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன். எனது தாலுக்காவைப் பொருத்தமட்டில், தென் ஆற்காடு மாவட்டத்தைப் பொருத்த மட்டில் பல கிராமங்களுக்கு மின்சாரம் வழங்கப்பட்டிருக்கிறது. எனது தொகுதியில் ஏற் கெனவேயே சில கிராமங்களுக்கும் இப்போது பல கிராமங் களுக்கும் மின்சாரம் விஸ்தரிக்கப்பட்டு, விவசாயிகளுக்கு வேண்டியபோதெல்லாம் மின்சாரம் வழங்கப்பட்டு வருகிறது என்ற முறையில் இந்த இலாகாவையும், அமைச்சர் அவர்களேயும் பெருமையோடு பாராட்டக் கடமைபட்டிருக்கிறேன். அது மாத்திரமில்லாமல், பி.டபிள்யூ.டி. இலாகாவிலிருந்து, வாய்க் காலுக்கு ஓரத்தில் 100 அல்லது 200 அடி தூரத்திற்குள் இருக்கக் கூடிய விவசாயிகள், ஏழை, நடுத்தர, பெரிய விவசாயிகள், போர் செட் அமைக்கவேண்டுமென்று சொன்னல் பர்மிஷன் வாங்க வேண்டியிருக்கிறது. அதை உடனடியாக ரத்து செய்யவேண்டு மென்று நான் அதிகத் தாழ்மையோடு கேட்டுக்கொள்கிறேன். காரணம் என்னவென்ருல் பி.டபிள்யூ.டி. வாய்க்காலில் மேலே போய்க்கொண்டிருக்கிறது தண்ணீர். ஆனல் விவசாயி 100 அடி அல்லது 80 அடி போர் போட்டு தண்ணீர் எடுக்கவேண்டி யிருப்பதால் மேலேயிருக்கும் தண்ணீரை கீழே இருக்கும் போர்செட் இழுக்க வாய்ப்பு இருக்கிறது என்று சொல்லுகிறர்கள். ஆகவே இம்மாதிரி நெருக்கடியை நீர்த்து, இதை கூடிய சீக்கிரத்தில் ரத்து செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அது மட்டுமல்ல. கன்ஸ்ட்ரக்ஷன் வேலே நடக்கும்போது, புதிதாக விவசாயி ஒருவர் தனக்கும் கரண்ட் வேண்டுமென்று மனு கொடுத்தால், அதை உடனடியாக எடுத்து செய்யவேண்டு

18th August 1961] [Sri S. Thangavelu]

மென்று ஒரு ஆர்டர் பிறப்பிக்கவேண்டுமென்று இந்த நேரத்தில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். காரணம் எந்தெந்த பார்ட்டிகளுக்கு கரண்ட் தேவையோ அத்தனை பேர்களுக்கும் சேர்த்து டிபார்ட்மெண்ட் வேலையை எடுத்துக்கொள்கிறார்கள். இடையில் மனு போட்டால், தனியாக மனு போட்டு வாங்கிக் கொள்ள வேண்டுமென்று விட்டுவிடுகிறார்கள். ஆரம்பத்தில் பெட்டிஷன் கொடுக்கும்போதே கன்ஸ்ட்ரக்ஷன் டிபார்ட்மெண்ட்காரர்கள் அதற்கும் சேர்த்து எஸ்ட்டிமேட் தயார் செய்து அவர்களுக்கும் கொடுக்கும்படியான முறையில் இருக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக புதிதாக சர்வீஸை கொடுப்பது டிவிஷனல் என்ஜினியர் கையில் இருக்கிறது. சில விவசாயிகளுக்கு தனியாக கரண்ட் கொடுக்கலாம் என்ற அதிகாரம் இருக்கிறது. எந்தெந்த விவசாயிகள் மனு கொடுக்கிறார்களோ அந்த மனுக்களை கூடிய சீக்கிரத்தில் பரிசீலனை செய்து, ஏழை விவசாயிகளுக்கு, பெட்டிஷன் கொடுத்து இரண்டொரு மாதங்கள் தள்ளிப் போனாலும் பரவாயில்லை. கூடிய சீக்கிரத்தில் கொடுக்க டி.ஈ.-க்கு உத்தரவு பிறப்பிக்கவேண்டுமென்று இலாகா தலைமை அதிகாரியிடம் சொல்லவேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

(Deputy Speaker in the Chair.)

அது மாத்திரமல்லாமல் மின்சார இலாகா நல்ல முறையில் மின்னல் வேகத்தில் பணியாற்றிக்கொண்டு வருகிறது. அதற்காக இலாகாவில் பணியாற்றக்கூடிய சிப்பந்திகளையும் நாம் பாராட்டக் கடமைபட்டுள்ளோம்.

இன்னொரு காரியமும் இருக்கிறது. அதாவது ஒரு விவசாயி தன் போர்செட்டிற்கு மின்சாரம் வாங்கிய பிறகு, ஆக்ஸிடெண்டில் இறந்து போன ஒரு ஏழை மகனுக்கு நாளது வரையில் பணம் கொடுக்கப்படாமல் இருக்கிறது. உதாரணமாக எனது தொகுதியில், பண்டாக்கோட்டை என்ற ஒரு இடத்தில் பட்டப் பகலில் சாயந்திரம் 5 அல்லது 6 மணி இருக்கும்போது கரண்டை செலுத்திக்கொண்டிருக்கும்போது பிறகு கொல்லை வரை போய் கேட்டுக்குள் புகுந்திருக்கிறார்.

அது நல்ல முறையில் அமைக்கப்படாததின் காரணமாக, அந்த மின்சாரக் கம்பியின்மீது ரப்பர் உரை இல்லாததின் காரணமாக அந்த நபரின்மீது கரண்ட் ஷாக் அடித்து கீழே விழுந்து, அதே இடத்தில் அவன் இறந்து விட்டான். உடனே எனக்கு தகவல் கிடைத்தது. நான் அந்த இடத்திற்குச் சென்று பார்த்தேன். அங்கு மதிப்பிற்குறிய டிஸ்டிரிக்ட் என்ஜினியர் அவர்களும் வந்திருந்தார்கள். லையன் இன்ஸ்பெக்டர், லையன் மென், அசிஸ்டெண்ட் என்ஜினியர், சப்-இன்ஸ்பெக்டர் குப்புசாமி ஆகிய எல்லோரும் வந்திருந்தார்கள். இவர்கள் அனைவரும் வந்து போனார்களே தவிர, நாளது வரையில் அதுபற்றி என்ன செய்தார்கள் என்பது தெரியாது. புருஷனை இழந்த அந்த

[Sri S. Thangavelu] [18th August 1961

சகோதரிக்கு இதுவரைக்கும் எந்தவிதமான பணமும் கொடுக்கப் படவில்லை. ஆனால் இது சர்க்கார் இலாகாவின் குற்றமல்ல. அந்த சர்விசை வைத்துள்ள முதலாளியின் குற்றமென்று டீ.ஈ. அவர்கள் என்னிடம் சொன்னார்கள். அந்த முதலாளியிடமிருந்து அந்த ஏழைச் சகோதரிக்கு வாழ்க்கைப் பணம் 3,000, 2,000 என்று இல்லாவிட்டாலும் ஒரு ஆயிரம் ரூபாயாவது கொடுத்து, அவளையும் தனது குழந்தையை பராமரிப்பதற்கும் பாதுகாபப தற்கும் கொடுத்திருக்கலாம். அந்த ஏற்பாட்டையும் இது வரை செய்யவில்லை. அந்த முதலாளியும் அவள் புருஷன் இறந்தவுடன் அவளை வேலைக்கும் வைத்துக்கொள்ளவில்லை. அந்தப் பெண்தான் ஊரில் வாழ்க்கையை நடத்த முடியாமல், குழந்தையை எடுத்துக்கொண்டு தன் தாய் வீட்டிற்குப் போய்விட்டாள். டீ.ஈ. அவர்களைக் கேட்டால், அவர் இது இலாகாவின் குற்றமல்ல, இலாகாவின் குற்றமாக இருந்தால், சர்க்காரிலிருந்து பணம் வாங்கிக் கொடுக்கலாம்; இது முதலாளியின் குற்றமாக இருப்பதால், அவர்தான் கொடுக்க வேண்டும், ஆனால் அவரோ மறுக்கிறார். அதற்கு என்ன செய்ய வேண்டுமென்றால், அந்த அம்மையார் கோர்ட்டுக்குத்தான் போகவேண்டும். அங்கு போய் மனு போட்டால் தான் அவர்கள் வசூலித்துக் கொடுப்பார்கள் என்று சொல்கிறார்கள். அந்த ஏழை மகனோ தான் வேலையில் இருந்தபோது, மாதத்திற்கு 12 மரக்கால் நெல்தான் ஊதியமாக பெற்று வந்தான். அதாவது ஒருசில படி அரிசி தான். அப்படிப்பட்டவன் திடீரென்று இறந்து விட்டான். இப்படிப்பட்ட நிலையிலுள்ள அந்த அம்மையார் எப்படி கோர்ட்டுக்குப் போக முடியும்? அதற்கான பணம் அந்தச் சகோதரிக்கு எங்கிருந்து கிடைக்கும்? ஆகவே சர்க்கார் இதைப் பரிசீலனை செய்து, இம்மாதிரித் தவறுகள் ஏற்பட்டால், இம் மாதிரித் தவறுகளுக்கு முதலாளிகள் காரணம் என்று தெரிந்தால், அந்த முதலாளிகளிடமிருந்து சர்க்கார் அதிகாரிகளோ அல்லது அரசாங்கமோ தலையிட்டு, அந்த ஏழை மகளுக்கு பணம் கிடைக்க வழி செய்யவேண்டுமென்றும், அரசாங்கமே வாங்கிக் கொடுக்க வேண்டுமென்றும் இந்த நேரத்திலே நான் எல்லோரையும் கேட்டுக்கொள்கிறேன்.

அது மட்டுமல்ல, பாண்டிச்சேரி எல்லைக்குள் மின்சார இலாகா வில் மின்சாரம் வழங்கப்பட்டிருப்பதைக் கண்டு நாம் பெருமைப் பட வேண்டியிருக்கிறது. அது நம்முடைய அரசாங்கத்தில் இருந்த போதிலும்கூட, அங்கு எங்கு பார்த்தாலும் மின்சாரம் வழங்கப்பட்டிருக்கிறது. அந்த பகுதிக்கு அருகாமையிலுள்ள தொகுதியாகிய நமது நண்பர் ஸ்ரீ சீனுவாச படையாச்சித் தொகுதி யிலுள்ள பகுதிக்கு இன்னும் மின்சாரம் வழங்கப்படவில்லை. ஆனால் அதறகுப் பக்கத்திலுள்ள நமது எல்லையிலுள்ள கிராமத்திற்கு மின்சார வசதி கிடையாது என்ற காரணத்தினால் அங்குள்ள ஏழை விவசாய மக்கள் தங்களுக்கும் கரண்ட் வேண்டுமென்று கேட்கிறார்கள். ஆகவே இதையும் அவர்கள் நன்கு பரிசீலனை செய்து, கூடியசீக்கிரத்திலே ஏழை விவசாயி

18th August 1961] [Sri S. Thangavelu]

களுக்கு, அவர்களிடையே பாரபட்சம் பார்க்காமல் யாராக இருந்தாலும் மின்சாரம் வழங்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். ஆனால் ஏதோ ஒரு சில கம்யூனிஸ்ட் தோழர்கள் மின்சார இலாகாவினர் பணக்காரர்களுக்குத் தான் கரண்ட் கொடுக்கிறார்கள், ஏழைகளுக்கு கொடுக்கவில்லை என்று குற்றம் சாட்டுகிறார்கள். குற்றம் கூற வேண்டுமென்ற நோக்கத்தோடு பார்த்தால், அவர்களுக்கு பார்ப்பதெல்லாம் குற்றமாகவே படுகிறது. எந்த மனப்பான்மைகொண்டு பார்க்கிறோமோ, அந்த மனப்பான்மையிலேயே அவைகள் அமைகின்றது. ஆகவே நல்ல மனப்பான்மையோடு எதையும் பார்க்கவேண்டும். அப்படிப் பார்த்தால், மின்சார இலாகாவினர் நல்லமுறையில் வேலை செய்து கொண்டு வருவது தெரியுமென்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன்.

அதேபோல் கீழ்தரப்பிலுள்ள சிப்பந்திகளுக்கு பிரமோஷன் கொடுக்கும் விஷயத்தைக் கவனிப்பதற்கு அதிகாரிகள் அந்த இலாகாவினர் இருக்கின்றனர். அப்படி செய்யக்கூடியதைக் கவனிப்பதற்கு அதற்குமேல் அரசாங்கம் வேறு இருக்கிறது. அப்படி இருந்தும், அனுவசியமாக சிலர் கீழ்த்தர சிப்பந்திகளை தூண்டிவிட்டு, தங்கள் கட்சிக்குப் பலம் சேர்த்துக்கொள்ளப் பார்க்கின்றனர். நல்லமுறையில் வேலை செய்துகொண்டு வருபவர்களை அனுவசியமாக கெடுக்க வேண்டாமென்றும், அதைக் கவனித்துக்கொள்ள அரசாங்கமும், அதிகாரிகளும் இருக்கிறார்கள், அதையெல்லாம் மறந்து விடுங்கள் என்றும் கேட்டுக் கொள்கிறேன்.

சுதந்திரா பார்ட்டியைப் பார்த்து காங்கிரஸ்காரர்கள் கவலைப் படுகிறார்கள், பயப்படுகிறார்கள் என்று கம்யூனிஸ்ட் கட்சி அங்கத் தினர் ஒருவர் சொன்னார்கள். அவர்கள் அப்படிச் சொல்லிக் கொண்டே, சுதந்திரா பார்ட்டியோடு கூட்டுச் சேருவதற்கான முயற்சிகளை செய்து கொண்டிருக்கிறார்கள். இதைத் தவிர, மற்றொரு கட்சி, "அடைந்தால் திராவிடநாடு, இல்லையேல் சுடுகாடு" என்று சொல்லிக்கொண்டு அவர்களும் சுதந்திரா கட்சி யோடு கூட்டுச் சேர்த்துக்கொள்ளப் பார்க்கிறார்கள். இவர்கள் குறை சொல்வதைத் தான் கொள்கையாக வைத்துக்கொண்டு பேசி வருகிறார்கள். முன்னால் மின்சார இலாகாவில் காரியங்கள் எப்படி நடைபெற்று வந்தன, இப்போது எந்த அளவுக்கு மின்சார இலாகா வேலை செய்து வருகிறது. கிராமங்கள் இப்போது மின்சார வசதி பெற்று எப்படி விளங்குகின்றன என்று பார்த்தால் இப்படிச் சொல்ல மாட்டார்கள். உதாரணமாக, எங்கள் மாவட்டத்தில் பண்ணுருட்டி தாலுக்காவில் அங்குசெட்டி பாளையம் முதல் இந்த விளக்குகள் எரிவதைப் பார்த்தால் சொர்க்கலோகம் போல் காட்சியளிக்கிறது. காரணம் எங்கு பார்த்தாலும் ஒரே மின்சார டியூப் விளக்குகள் ஒரே வரிசை யாகப் போடப்பட்டு, பிரமாதமாக இருக்கிறது. இதையெல்லாம் பார்த்துவிட்டுகூட, மின்சாரம் கொடுக்கப்படவில்லை, அது செய்ய

வில்லை, இது செய்யவில்லை என்று சொல்வதில் பயனில்லை. அனுவசியமாக கீழ்த்தர சிப்பந்திகளைத் தூண்டிவிட்டு, உங்களுக்கு சம்பளம் கொடுக்கவில்லை, அது செய்யவில்லை, இது செய்யவில்லை என்று சொல்லி அவர்களை ஸ்டிரைக் செய்யும்படி சொல்வதில் எந்தவித பிரயோஜனமும் இல்லை என்பதைச் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். நண்பர் மாதா கவுடர் சொன்னதுபோல், இந்த ஸ்டிரைக் என்பதே கூடாது என்று நாம் ஒரு முடிவெடுக்க வேண்டுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

நீங்கள் ஸ்டிரைக் செய்யுங்கள், நாங்கள் மேலிடத்தில் பார்த்துக்கொள்கிறோம் என்று ஏழை மக்களை அனுவசியமாக தூண்டிவிட்டு, அவர்களிடத்தில் ஸ்டிரைக் கூச்சல் கிளம்பிய வுடன், அவர்கள் பின்தங்கி விடுவதால் யாருக்கு நஷ்டமேற் படுகிறது என்பதை அவர்கள் சற்று யோசித்துப் பார்க்க வேண்டும். அதனால் சர்க்காருக்குத் தான் கஷ்டம் ஏற்படுகிறது. ஒரு மணி நேரம் மின்சாரம் இல்லாது போனால், அதனால் கிராமங் களிலே வசிக்கும்படியான விவசாயிகளுக்கு ஒரு லட்சம் ரூபாய்க்கு மேல் நஷ்டமேற்படுகிறது என்பது என்னுடைய கருத்தாகும். ஒரு மணி நேரம் இப்படி மின்சாரம் இல்லாது போனால் போதும், அவர்கள் 2,000, 3,000 ரூபாய் கொடுத்து வாங்கி வைத்திருக்கும் பம்பு செட்டுகள் வேலை நின்று விடும். அவர்கள் வைத்திருக்கக்கூடிய 5 குதிரை வேகம், 7½ குதிரை வேகம் போன்ற எந்திரங்களுக்கு ஆயில் போட்டு இயக்குவதாக இருந்தால், அதனால் ஏழை விவசாயிகளுக்கு ரொம்பவும் நஷ்ட மேற்படுகிறது என்று நான் கருதுகிறேன்.

அதேபோல் தனியார் வைத்திருக்கும் கம்பெனிகளுக்கு சலுகை கொடுக்கவேண்டாமென்று நான் சொல்லவில்லை. எந்தெந்த பொருள்களை, எந்தெந்த விலைக்கு விற்க வேண்டு மென்று ஒரு விலை நிர்ணயம் செய்தால்தான், தனிப்பட்ட முதலாளிகள் விற்கக்கூடிய இந்த பம்பு செட்டுகள் சாமான்களை ஏழை விவசாயிகளும், நடுத்தர விவசாயிகளும் வாங்கி பயன்பெற முடியும். இல்லாவிட்டால், பாக்கேஜ் சார்ஜ், அந்த சார்ஜ், இந்த சார்ஜ் என்று 20 அல்லது 30 ரூபாய் அதிகம் வாங்கி விடுகிறார்கள். ஆகவே இம்மாதிரி விவசாயிகளுக்கு பாதகம் ஏற் படாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். சாதாரணமாக, ஒரு பார்டை ரூபாய் 150-க்கு விற்க வேண்டியதை, மேலே 10 ரூபாய் கொடுத்தால்தான் கிடைக்குமென்று சொல்லி பணம் மேலே வாங்குகிறார்கள். இப்படி வாங்குவதால், அது யாருக்கு நஷ்டம்? ஏழை விவசாயிக்குத்தான் நஷ்டமேற்படுகிறது. தவிர, மின்சார மோட்டார் வைத்திருந்தால் ஒரு விவசாயிக்கு ஒரு மணி நேரத்திற்கு பல யூனிட்டுகள் தான் செலவாகிறது. ஒரு யூனிட்டுக்கு சார்ஜ் 15 நையே பைசே என்று நினைக்கிறேன். அதன்படி கணக்கிட்டால் 30 நயே பைசே தான் ஆகிறது ஒரு மணிக்கு. ஆனால் அதே நேரத்தில் ஒரு மணி நேரத்திற்கு ஆயில் எஞ்சின் வேலை செய்வதாக இருந்தால், ரூ. 1¼ முதல் ஒன்னே

18th August 1961] [Sri S. Thangavelu]

முக்கால் ரூபாய் வரை செலவாகிறது என்று நினைக்கிறேன். ஆகவே, இந்த மின்சார வசதியினால் மின்சார மோட்டாரைக் கொண்டு, விவசாயிகள் நல்ல நன்மை அடைகிறார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. ஆகவே, இத்தகைய உதவி செய்யும் சர்க்காருக்கும், அந்த இலாகாவிலே பணியாற்றும் எல்லா அதிகாரிகளுக்கும், ஊழியர்களுக்கும் என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொண்டு, அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கக் கூடிய இந்த வரவுசெலவு கோரிக்கையை ஆதரித்து என் உரையை முடித்துக் கொள்கிறேன். ஜெய் ஹிந்த்.

12 noon.

* **Sri A. V. P. PERIAVALAGURUVA REDDI** : கனம் அவைத் தலைவர் அவர்களே, மின்சார போர்டின் வரவு செலவு திட்ட விவாதத்தின் பேரில் நான் சில வார்த்தைகள் சொல்ல பிரியப் படுகிறேன். பைகாரா திட்டத்தின் மூலம் மின்சாரம் வந்த பொழுது எங்கள் திருமங்கலம் தாலுக்காவில் ஒரு பம்பு செட்டு போட்டு காண்பிக்கவேண்டுமென்று மின்சார இலாகா என்ஜினியர்கள் வந்தார்கள், கேட்டார்கள். ஒரு பம்பு செட்டு போடுவதற்குக்கூட ஒரு விவசாயியும் முன்வரவில்லை. ஏனென்றால் கரெண்டினால் பயிர்கள் செத்துப்போய்விடும் என்று பயந்தார்கள். என்னை வந்து பார்த்தார்கள். கண்டிப்பாக ஒரு பம்பு செட்டு போட்டு காண்பிக்கவேண்டும் என்று சொன்னேன். மாடு வைத்து இறைத்து விவசாயம் செய்வதைவிட பம்பு செட்டுப் போட்டு தண்ணீர் இறைத்தால் எவ்வளவு லாபம் இருக்கிறது என்று கணக்குப்போட்டு காண்பித்து, அதற்குப் பின்னால் நான் தான் முதல் முதலில் திருமங்கலம் தாலுகாவில் கள்ளிக்குடி என்ற கிராமத்தில் ஒரு பம்பு செட்டு போட்டேன். மறு வருஷத்தில் 20, 30 பேர்கள் பம்பு செட்டு போட்டார்கள். இன்று தாலுகாவில் 600, 700 பம்பு செட்டுகள் ஓடிக்கொண்டிருக்கின்றன. அப்படி முன்னேற்றம் அடைந்துகொண்டிருக்கும்பொழுது அங்கு மின்சாரம் வரவில்லை, இங்கு வரவில்லை என்று குற்றம் சொல்லிக் கொண்டிருப்பதில் பயன் இல்லை. மினிமம் சார்ஜ் ஒழுங்காக கொடுக்கவேண்டும். ஒரு மைலுக்கு லைன் கொண்டு வருவதற்கு 10, 20 பம்பு செட்டுகளுக்கு சேர்த்து எக்ரிமெண்டு கொடுப்பது இல்லை. மின்சார இலாகாவும் அங்கு லைன் கொண்டு போவதில்லை. விவரம் தெரியாமல் எங்கள் கிராமத்திற்கு வரவில்லை, உங்கள் கிராமத்திற்கு வரவில்லை என்று சொல்லிக்கொண்டிருப்பது பிரயோசனமற்ற காரியம்.

விவசாயிகளுக்கு பம்பு செட்டுகள் கொடுப்பதில் சில குறை பாடுகள் இருக்கின்றன. அடியேனுக்குத் தெரிந்தவரையில் சொல்லுகிறேன். கனம் மின்சார அமைச்சர் அவர்களும், மின் சார போர்டாரும் இதை தீர்க்க ஆலோசனை செய்து, அந்தக் குறைகளையெல்லாம் நீக்கினால் விவசாயிகளுக்கு மிகவும் நன்மை யாக இருக்கும். உலகத்திலே எடுத்துக்கொண்டால் டவுனிலே வாழக்கூடியவர்கள், நகரத்திலே வாழக்கூடியவர்கள், பெரிய பிரபுக்கள், ஏன் கடவுளாக இருந்தாலும் சரி, விவசாயிகள்

[Sri A. V. P. Periavalaguruva Reddi] [18th August 1961

உற்பத்தி செய்யக்கூடிய விளைபொருள்களை, தானியங்களைத் சாப்பிட்டுத் தான் வாழமுடியுமே தவிர, இல்லாவிட்டால் உலகமே அழிந்துவிடும்படியான நிலை ஏற்படும். நம்முடைய அரசாங்கம் அப்பளம் செய்கிறவர்களுக்கு உதவி செய்கிறார்கள். நாதஸ்வரம் வாசிக்கக்கூடியவர்களுக்கு பள்ளிக்கூடம் ஏற்படுத்தியிருக்கிறார்கள். விவசாயிகளுடைய குறைபாடுகளையும் முக்கியமாக அவர்கள் கவனிக்கவேண்டும். ஷிப்டு முறை வைத்திருப்பதினால் இரவில் பாதிப் பேர்கள் தண்ணீர் இறைக்கவேண்டியிருக்கிறது, பகலில் பாதி பேர்கள் தண்ணீர் இறைக்கவேண்டியிருக்கிறது. வயலாக இருந்தால் இராக்காலத்தில் வெட்டிவிட்டு தண்ணீர் பாய்ச்சி விடலாம். ஆறு அடிக்கு ஆறு அடி பாத்தி கட்டி சோளம், கம்பு போட்டிருப்பவர்கள் இரவில் எப்படி தண்ணீர் பாய்ச்ச முடியும் என்பதை தயவு செய்து யோசிக்க வேண்டும். டாமில் தண்ணீர் இல்லாவிட்டால் யாராலும் ஒன்றும் செய்ய முடியாதுதான். ஆனால் விவசாயத்திற்கு முதல் இடம் கொடுக்கவேண்டும். சகல ஜீவன்களுக்கும் உணவு அளிக்கக்கூடிய ஒரு தொழில் அது. அதற்குப் பின்னால்தான் மற்ற தொழில்களுக்கு மின்சாரம் கொடுக்க வேண்டும். கருத்திருமன் அவர்கள் சொன்னதுபோல், விவசாயத்திற்கு முதல் இடம் கொடுக்கவேண்டியது அத்தியாவசியம்.

அதில் இன்னொரு கஷ்டம் என்னவென்றால், 'பில்லில்' சர்ஜார்ஜ் இரண்டு அணா போட்டிருக்கிறார்கள். நான் கனம் மந்திரி அவர்களிடத்தில் கூட 5, 6 மாதங்களுக்கு முன்னால் சொன்னேன். பில்லைக் காண்பித்தேன். அதில் போட்டிருந்தது. ஒரு மாதத்தில் சர்ஜார்ஜ் போடுகிறார்கள், ஒரு மாதத்தில் போடுவதில்லை. விவரம் என்ன என்பது எனக்குப் புரியவில்லை. அடுத்தபடியாக, மீடர் வாடகை வாங்குகிறார்கள். பத்து வருஷங்கள் மீடர் வாடகை கட்டியிருந்தால், சர்க்காருக்கு அதனுடைய கிரயம் வந்திருக்கும். ஆகவே, 10 வருஷமாகக் கட்டினவர்களுக்காவது மீடர் வாடகை வாங்கக்கூடாது என்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த வருஷம் 'டாமில்' தண்ணீர் இல்லை என்று கரண்டு 'கட்' பண்ணிவிட்டார்கள். ஆனால் வருஷக் கடைசியில் மினிமம் சார்ஜ் கேட்கிறார்கள். கரண்டு கொடுக்காமலே மினிமம் சார்ஜ் கேட்டால் எப்படிக் கொடுப்பது? ரூ. 100 மினிமம் சார்ஜ் கொடுத்தால், ரூ. 50, 60-க்கு தண்ணீர் இறைத்தது போக ரூ. 40 அனாவசியமாக கையிலிருந்து கட்டவேண்டிய நிலைமை விவசாயிகளுக்கு ஏற்படுகிறது. இம்மாதிரி 'டாமில்' தண்ணீர் இல்லாததினால் கரண்டு கட் பண்ணும் வருஷத்தில் விவசாயிகளிடத்திலிருந்து மினிமம் சார்ஜ் வாங்கக்கூடாது என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

பைக்கார ஸிஸ்டம் வந்தபொழுது சொன்னார்கள். ஆறு வருஷங்களுக்குத் தான் யூனிட்டுக்கு 0-1-3 சார்ஜ் என்பது. ஆறு வருஷம் ஆனபிறகு 6 பைஸா ஆகிவிடும் என்று சொன்னார்கள். மில்லுக்கு 4 பைஸாவாக இருப்பது 3 பைஸாவாக ஆகிவிடும் என்று பேப்பரில் வந்திருக்கிறது, திட்டம் போட்டிருக்கிறார்கள்

என்று சொன்னார்கள். நான் சொன்ன வார்த்தை 1938-ல். அப்பொழுது அப்படிச் சொன்னார்கள். இப்பொழுது விவசாயிகளிடமிருந்து கோடி கோடியாக வாங்குகிறார்கள். விவசாயிகளுக்கு மின்சாரம் கொடுப்பதன் மூலம் 3 கோடி ரூபாய் வசூல் ஆகிறது என்றும், மில்களுக்கு கொடுப்பதன் மூலம் 2 கோடி ரூபாய் வசூல் ஆகிறது என்றும் ஒரு பேப்பரில் படித்தேன். அந்த நிலையிலே விவசாயிகள் இருக்கிறார்கள். விவசாயிகள் வாயில்லா பூச்சிகளாக இருப்பதால், அவர்களால் ஒன்றும் சேர்ந்து கேட்க முடியாது. அவர்களுக்கு ஒன்றும் தெரியாமல் மேலும் மேலும் கொடுத்ததையே கொடுத்துக்கொண்டு ரொம்பவும் கஷ்டப்படுகிறார்கள். இதையெல்லாம் கொஞ்சம் அரசாங்கம் பரிசீலனை செய்து அவர்களுக்கு உதவி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, பம்பு, ஸ்டார்ட்டர், சுவிட்ச், இவைகளுடைய விலைகளை கண்டபடியெல்லாம் உயர்ந்துவிட்டன. 1938-ல் நான் பம்பு செட்டு வாங்கிய காலத்திலே ஒரு செட்டு ரூ. 350 ஆயிற்று. இப்பொழுது ரூ. 1,500 அடக்கம் ஆகிறது. அவர்கள் இஷ்டம் போல் கம்பெனிகளில் விலை சொல்லுகிறார்கள். ஒவ்வொரு ஜில்லாவிலும் மின்சார இலாகா விவசாயிகளுக்கு குறைந்தது 100 பம்பு செட்டுகள் நியாயமான விலையில் சப்ளை செய்து உதவவேண்டும். விவசாயிகளுக்கு பம்பு செட்டுகளுக்கு கரண்டு கொடுப்பதற்கு மின்சார இலாகாதான் உத்தரவு போடவேண்டும். ஆகவே, குறைந்த விலையிலே, அவர்களுக்கு அடக்கம் ஆகக்கூடிய விலையிலே, அதற்குக் கூட பாங்கு வட்டி போட்டுக்கொண்டால் கூட பாதகம் இல்லை. சர்க்காரோ, மின்சார போர்டோ பம்பு செட்டுகளை சப்ளை செய்யவேண்டும். மதுரையில் 4 கம்பெனிகள் இருக்கின்றன. அதில் 2 கம்பெனிகளில் ஸ்டாக் இருக்கிறது. இரண்டு கம்பெனிகளில் ஸ்டாக் இல்லை. உடனே ஸ்டாக் இருக்கும் கம்பெனிகள் இஷ்டம் போல் விலை சொல்லுகிறார்கள். நான் முன்பு வாங்கியபோது ஸ்டார்டர் ரூ. 25, மெயின் ஸ்விட்ச் ரூ. 15. இப்பொழுது மெயின் ஸ்விட்ச் விலை ரூ 120, ஸ்டார்டர் விலை ரூ 350. ஒரு மடங்கு, இரண்டு மடங்கு விலை உயர்ந்தால் பரவாயில்லை. அன்று ரூ. 150-க்கு வாங்கியிருந்தால், இன்றைக்கு ரூ. 450, 550 என்று விலை சொல்லுகிறார்கள். இரண்டு கம்பெனிகளில் ஸ்டாக் இல்லை என்றால், மறு நாளைக்கே 100 ரூபாய் விலை ஏற்றிச் சொல்லுகிறார்கள். நான் சொல்லுவது மாதிரி செய்தால் அரசாங்கத்திற்கு நஷ்டம் வரப்போவதில்லை. கண்ட்ரோல் விலைக்கு சப்ளை செய்தால் விவசாயிகள் அதிக ஊக்கத்தோடு விவசாயத்தில் ஈடுபடுவதற்கு சாதகமாக இருக்கும். நம் மாகாணத்தில் அதிகமான கிராமங்களுக்கு மின்சாரம் கொடுத்திருக்கிறார்கள். எங்கள் தாலுகாவில் பாக்கியே கிடையாது. சட்டத்திலிருக்கும் திட்டப்படி அவர்கள் செய்துவிட்டு மின்சாரம் கேட்டால், உடனே 'டிலே' இல்லாமல் கரெண்டு வந்துவிடும். எங்கள் தாலுகாவில் எல்லா கிராமங்களுக்கும் கிட்டத்தட்ட கரண்டு வந்துவிட்டது. இவ்வளவு தூரம் முன்னேற்றம் ஏற்படுவதற்குக் காரணம் நம்முடைய மின்

சார இலாகா சீப் என்ஜினியர் ரொம்பவும் சுறுசுறுப்பாக அக்கரை யோடு கவனம் செலுத்தி விவசாய மக்களுக்கு மிகவும் நன்மை செய்யவேண்டும் என்ற ஆர்வத்தோடு அவர்கள் இருப்பதினுல் தான். எந்த வேலை செய்வதற்கு எஸ்டிமேட் போட்டாலும் ஒரு வருஷத்திற்குள் வேலை செய்து முடிக்கவேண்டுமென்றால், 1-1/2 வருஷத்திற்கு தள்ளிவிடுகிருர்கள். அதேமாதிரிதான் எஸ்டிமேட் போதாது என்று ரிவைஸ்டு எஸ்டிமேட் போடுகிருர்கள். ஆனல் எந்த வேலையை எடுத்துக்கொண்டாலும் நமது சீப் என்ஜினியரி டத்தில் அது கிடையாது. 1-1/2 வருஷத்தில் வேலை முடியவேண்டு மென்றிருந்தால் ஒரு வருஷம் இரண்டு மாதங்களுக்குள்ளேயே வேலையை முடித்துவிடுகிருர்கள். அதேமாதிரிதான் 5 கோடி ரூபாய்க்குத் திட்டம் போட்டால், 4 கோடி ரூபாயிலேயே வேலையை முடித்துவிடுகிருர்கள். அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில், நமக்கு நல்ல ஒரு சீப் என்ஜினியர் இருப்பதால் மின்சார அபிவிருத்திக் காக இன்னும் எவ்வளவு பணம் செலவழித்தால் கூட அது விரயம் இல்லை. அனவசியமாகப் போகப்போவதில்லை. எவ்வளவு பணம் செலவழித்தாலும் செல்லும், அதற்குத் தக்கபடி அரசாங் கத்திற்கு லாபம் உண்டு. நமது மாகாணம் முன்னேற்றமடைய, தொழில்களெல்லாம் வளர, எப்படி எப்படி என்ன என்ன செய்ய வேண்டுமோ, அவைகளைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். இப்படியிருக்கும் சமயத்திலே, மலையாளத் திற்கு கரண்ட் கொடுக்கப் போவதாகச் சொல்லுகிருர்கள். நாமே இங்கு திண்டாடும் போது, அவர்களுக்கு வேறு கொடுத்து விட்டால், ரொம்ப சங்கடமாகப் போய்விடும்.

இப்படி இந்த மின்சாரத்தைப் பற்றிப் பேசும் சந்தர்ப்பத்திலே, ஒரு கனம் அங்கத்தினர் ராத்திரியில் குசு, குசு என்று பேசுகிருர் கள் என்று சொன்னுர்கள். இன்னொரு கனம் அங்கத்தினர் சுதந் திராக் கட்சி செத்துப் போச்சு என்று சொல்லிக் கொண்டு போகிருர்கள். அதற்கு என்ன அர்த்தம் என்று எனக்குத் தெரிய வில்லை. செத்துப் போச்சு என்று சொல்லும் அங்கத்தினர் சுதந்திராக் கட்சி எப்படி வளர்ந்து வருகிறது என்பதைப் பார்த் தால் அந்த வார்த்தை சொல்ல மாட்டார்கள். அது காசியி லிருந்து, கன்யாகுமரி வரை வெகு துரிதமாக வளர்ந்து வருகிறது. ஜெட்விமானம் வேகத்தில் வேலை செய்து வருகிறது. இங்கிலாந்து. அமெரிக்கா எல்லாம், இங்கிலீஷ் பேப்பர்களிலே, காங்கிரசுக்கு சரியான எதிர்க்கட்சி உதயமாகியிருக்கிறது என்று எழுதுகிருர் கள். இங்கிலீஷ் படித்தவர்கள் அர்த்தம் சொல்லுகிருர்கள். எனக்கு இங்கிலீஷ் தெரியாது. இந்த மாதிரி வளர்ந்து வரும் கட்சியை செத்துப் போச்சு என்று சொல்லுகிருர்கள். அப் பொழுதே நான் ஒரு பாயிண்ட் ஆப் ஆர்டர் போட்டு இருப்பேன். ஆனல், அவர் புதுசாக இருக்கிருர் (சபைத் தலைவர்) எதற்கு சத்தம், நாம் பேசும்போது சொல்லிக் கொள்ளலாம் என்று இருந்து விட்டேன். பேசும்போது செத்துப் போச்சு என்று சொல்வதா சரியான வார்த்தை? எனக்குச் சொல்லத் தெரியாதா, காங்கிரஸ் செத்துப் போச்சென்று? நாக்கையா அறுத்து விடுவார்கள்.

18th August 1961] [Sri A. V. P. Periavalaguruva Reddi]

பேசும்போது நல்ல வார்த்தையாகப் பேசவேண்டும். மக்களிடம் போய் நல்லபடியாகச்சொல்லி, வோட்டுகளை வாங்குங்கள், ஆளுங்கள், வேண்டாம் என்று சொல்லவில்லை. எப்படியும் மக்களுககு நன்மை செய்தால் சரிதான். இத்தோடு முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

SRI K. S. SUBRAMANIA GOUNDER : மதிப்பிற்குரிய உதவி சபாநாயகர் அவர்களே, மின்சார அமைச்சர் கொடுத்துள்ள வரவு செலவுத் திட்டம் பற்றிப் பேசும்போது, இந்த இலாகாவை மிக நல்ல முறையிலே, இரண்டாவது திட்டத்திலும் தொடர்ந்து நடத்தி வரும் மின்சார இலாகாவையும், அதன் சீப் என்ஜினியரையும், அவர்களுக்கெல்லாம் பொறுப்பான அமைச்சரவர்களையும் பாராட்டுகிறேன். தமிழ் நாட்டிலே மிக்க நல்ல முறையிலே துரிதமாக வேலை செய்துவரும் இலாகா, மின்சார இலாகாதான் என்று சொன்னால் அது மிகையாகாது. குறிப்பாக அவர்கள் செய்யும் வேலைகளிலும், மற்ற வேலைகளைவிட, கிராமாந்தரங்களுக்கு மின்சாரம் அளிப்பதில் மிக்கதீவிரமான கவனம் செலுத்தி வருகிறார்கள்; ஒப்புக்கொள்ளுகிறேன். கிராமங்களுக்கு மின்சாரம் அளிப்பது என்பது மிக்க சிரமமான காரியம் என்பதை இதனால் லாபம் குறைவாக இருந்தாலும், மின்சார இலாகா எல்லா கிராமங்களுக்கும் மின்சாரம் அளிப்பதற்காக வேலைசெய்து வருவதைப் பார்க்கிறோம். அதே சமயத்தில் மின்சாரம் கிராமங்களுக்கு எந்த அளவில் பரவிவருகிறது என்பதை அமைச்சரவர்களும், மின்சார போர்டாரும் சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். போர்டார் நடத்தும் இடங்களில் நல்ல முறையில் பரவி வருகிறது உண்மைதான். ஆனால், கம்பெனி ஏரியாக்களிலே, விஸ்தரிப்பதற்கு எந்த விதமான ஏற்பாடும் இல்லாமல் எந்த விதமான முன்னேற்றமும் இல்லாமல் இருப்பதைப் பார்க்கிறோம். அதை எல்லோரும் ஒப்புக் கொண்டுதான் ஆகவேண்டும். அதற்காக வேண்டிய காரியங்களை சர்க்காரும், போர்டாரும் செய்துதான் ஆகவேண்டும். ஒரு குறிப்பிட்ட லைசென்சி ஏரியாவில் மின்சாரம் விஸ்தரிக்கப்படவில்லை என்றால், அதற்கு விவசாயிகள் காரணம் இல்லை. லைசென்சிகள் ஏரியாவில் மின்சாரம் பரவவில்லை யென்றால், சாதாரணமாக அரசாங்கத்தில் அவர்களுக்கு ரூ. 5 லட்சம் கடன் கொடுத்தாலும் கூட, அந்தத் தொகையைக் கொண்டு அவர்களும் அதிகமான விஸ்தரிப்புச் செய்துவிட முடியாது, என்பதை சர்க்காரும், போர்டாரும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அந்தத் தொகையைக் கொண்டு அதிகமாக மின்சாரத்தைப் பரப்புவது என்பதும் இயலாத காரியம். ஆகவே அவை யெல்லாவற்றையும் அரசாங்கமே பூராவாக எடுத்து நடத்துவதுதான் உசிதம். மற்ற இராஜ்ஜியங்களை விட தமிழ் நாட்டில் இருக்கக் கூடிய லைசென்சிகள் மிகவும் குறைவுதான். ஆகவே, அரசாங்கம் எடுத்துக் கொண்டாலும், காம்பன்ஸேஷன் தொகையும் ரூ. 25 அல்லது 30 கோடிதான் இருக்கும் என்று நினைக்கிறேன். எந்த அளவுக்கு இருக்கும் என்று நிச்சய

[Sri K. S. Subramania Gounder] [18th August 1961

மாகத் தெரியாது. ஆனால், மற்ற இராச்சியங்களை விட, லைசென்சிகள் தமிழ் நாட்டில் மிகக் குறைவு. ஆகவே அவற்றையெல்லாம் அரசாங்கமே எடுத்து நடத்த ஏற்பாடு செய்ய வேண்டும். அமைச்சரவர்களே இந்தக் குறிப்பில் சொல்லியிருக்கிறார்கள், லைசென்சி ஏரியாக்களில், அவர்கள் எங்கெல்லாம் மின்சார விஸ்தரிப்பை ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லையோ, அங்கெல்லாம், போர்டாரே ஏற்றுக் கொண்டு மின்சார விஸ்தரிப்பைக் கொடுக்கும் என்று. அதை வரவேற்கிறேன். இம்மாதிரி இருப்பதால் ஒரு பகுதி முன்னேற்றமும் மற்ற பகுதி முன்னேற்றம் அடையாமலும் இருக்கிறது. இப்படி சர்க்கார் அல்லது போர்டார் ஏரியா, லைசென்சிகள் ஏரியா என்றிருப்பதால் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. ஆகவே, ஒரு நிபுணர் கமிட்டியைப் போட்டு, அது பற்றிப் பூரணமாக ஆராய வேண்டும். அவ்வாறு செய்யாவிட்டால், மின்சாரம் விரிவாக வந்தும், சில குறிப்பிட்ட இடங்களில் முன்னேற்றம் இல்லாமல் போய்விடும். அதற்கு விவசாயிகள் காரணமாக மாட்டார்கள்.

சேலம்-ஈரோடு கம்பெனியின் லைசென்ஸ் காலம் முடிந்துவிட்டது. இம்மாதிரி இடங்களில் அரசாங்கம் முன் வந்து ஏதாவது ஏற்பாடு செய்யலாம். அந்தக் கிராமங்களுக்குக் குறிப்பிட்ட காலத்திற்குள்ளாக விஸ்தரிக்க வேண்டும் என்று சொல்ல வேண்டும். இல்லா விட்டால் மின்சார போர்டாரே எடுத்து நடத்த ஏற்பாடு செய்ய வேண்டும்.

மூன்றாவது திட்டத்தில் இப்பொழுது 21 யூனிட்டாக இருப்பது, 60 யூனிட்டாக அதிகப் படுத்தப்படும் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். உண்மையிலேயே இது பாராட்டத் தக்க விஷயம். இருந்த போதிலும், அதுவும் நம் தேவைக்குப் போதாது. தொழில் துறையில் விஸ்தரிப்பு ஏற்பட்டிருக்கிறது. அதைக் கொண்டு பார்த்தால் இந்த 60 யூனிட்டும் போதாது என்பதை அமைச்சரவர்களும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே இதை அதிகப் படுத்த, மின்சாரத்தை உற்பத்தி செய்ய, ஏற்பாடுகள் செய்ய வேண்டும். சேலம் ஜில்லாவில், ஹொகயனகல் என்ற நீர் வீழ்ச்சி இருக்கிறது. அங்கிருந்து மின்சாரம் எடுக்கலாம் என்று பல நாட்களாகச் சொல்லப் பட்டு வருகிறது. அதைப் பரிசீலனை செய்ய வேண்டும். தமிழ் நாட்டிற்கும் மைசூர் ராஜ்ஜியத்திற்கும் இடையே உள்ள பார்டரில் மேகதாது ஸ்கீம் என்று ஒன்று இருந்தது. அது என்ன காரணத்தினாலோ, தொடர்ந்து பரிசீலிக்கப்படவில்லை. அது பற்றியும் ஆலோசனை செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இவை ஒரு புறம் இருக்க, நம் தேவை பூராவுக்கும் ஹைட்ரோ எலக்டிரிக் ஸ்கீமை மட்டும் வைத்துக் கொண்டு நிறைவு காண முடியாது. இது இயலாத காரியம். இன்னும் தர்மல் ஸ்டேஷன்களும் ஓர் அளவுதான் செய்ய முடியும். ஆகவே தமிழ் நாட்டைப் பொருத்த மட்டில், மின்சார அபிவிருத்திக்கு, அடாமிக் பவர்

18th August 1961] [Sri K. S. Subramania Gounder]

ஸ்டேஷன் தான் வேண்டும். இதை தமிழ் நாட்டு அரசாங்கம் அறியாமல் இல்லை. அதுபற்றி மத்திய சர்க்காரிடமும், ப்ளானிங் கமிஷனிடத்திலும் வலயுறுத்திச் சொல்லவில்லை என்று யாரும் சொல்ல முடியாது. சொல்லப் போனால், தமிழ் நாட்டு அரசாங்கம் தான் முதன் முதலில், அணு மூலம் மின்சாரம் உற்பத்தி செய்வதை நம் இராஜ்ஜியத்தில் செய்ய வேண்டும் என்று சொல்லிற்று. ஆகவே, அந்த அளவில் நம் இராஜ்ஜியத்தின் தேவையை அனுசரித்து அணு மூலம் மின்சாரம் உற்பத்தியைப் பெருக்க நம் அரசாங்கம், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலேயே அதற்கான முயற்சிகளைச் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இன்னும் மேட்டூர் கால்வாய்ப் பகுதி, கீழ் பவானிப் பகுதி போன்ற இடங்களிலெல்லாம் மின்சார சப்ளை கிடைப்பது இல்லை. அங்கு பொது மராமத்து இலாகாவினர் ஆட்சேபனை சொல்கிறார்கள் என்ற காரணத்தால் மின்சார சப்ளை கொடுக்கும் விஷயம் தடங்கலாக இருக்கிறது. அதில் சீக்கிரமாக ஒரு முடிவு காண வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். அமைச்சர் அவர்களுக்கு இந்தப் பிரச்னை நேரடியாகத் தெரியும். அவர்கள் சுற்றுப் பிரயாணம் வந்தபோதும் பலர் அவரிடம் இதுபற்றி விண்ணப்பம் கொடுத்திருக்கிறார்கள். வாய்க்காலிலே தண்ணீர் வரககூடிய சமயத்தில் யாரும் மின்சாரத்தை உபயோகப்படுத்துவதே இல்லை; வாய்க்காலில் ஆறு மாதம் தான் தண்ணீர் வருகிறது. தணணீர் வராத பாக்கி ஆறு மாதங்களுக்கு மின்சாரம் கொடுப்பது மிகவும் அவசியமாக இருக்கிறது என்பதை அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். வருடத்தில் ஆறு மாதங்களுககு மின்சாரம் கிடைக்காத காரணத்தால், அந்தச் சரகத்தில் விவசாயம் இல்லாத அளவிலே இருக்கிறதென்று நான் சொன்னால் அது மிகையாகாது. ஆகவே, அந்த இடங்களுக்கு அத்தகைய காலங்களில் மின்சார வசதி செய்துகொடுக்க மின்சார இலாகா ஏற்பாடு செய்யவேண்டுமென்று தெரிவித்துக் கொள்கின்றேன்.

'க்ருப்பிங் ரெஸ்ட்ரிக்ஷ'னைப் பற்றிப் பல கனம் அங்கத்தினர்கள் பேசினார்கள். அதையே நானும் சொல்லவேண்டியிருக்கிறது. 'க்ருப்பிங் ரெஸ்ட்ரிக்ஷன்' உண்மையிலேயே விவசாயிகளைப் பாதிக்கக்கூடிய அளவிலே இருக்கிறது என்பதைத்தான் நான் அமைச்சர் அவர்களுக்குச் சொல்லிக் கொள்கிறேன். க்ருப்பிங் ரெஸ்ட்ரிக்ஷன் இல்லாத வகையில் எம்மாதிரி செய்தால் பகலில் விவசாயிகளுக்கு மின்சாரம் கிடைக்கும் என்பதை மின்சார போர்டார் ஆராயவேண்டுமென்று நான் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஸ்டார்ட்டர், ஸ்விட்ச்சுகள் எல்லாம் நியாயமான விலைக்குக் கிடைப்பது இல்லை என்பதைப் பற்றியும் பல கனம் அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். அது மிகவும் உண்மையான விஷயம் என்பதை நான் அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்தியாவிலேயே தயாரிக்கக் கூடிய மோட்டார்கள், ஸ்டார்ட்டர்கள், ஸ்விட்சுகள் இவைகளைப்பற்றி அரசாங்கம் ஒன்றும் கட்டுப்படுத்த முடியாது. அதைக் கட்டுப்படுத்த

[Sri K. S. Subramania Goundar] [18th August 1961

வேண்டுமென்றும் நான் சொல்ல முன்வரவில்லை. ஆனால், வெளி நாட்டிலிருந்து இறக்குமதி செய்யக்கூடிய ஸ்டார்ட்டர்கள், ஸ்விட்ச்சுகள் இவைகளை ஏன் இந்த விலைக்கு விற்கவேண்டும் என்று அரசாங்கம் உடனடியாக ஆராயவேண்டும். விவசாயிகள் அபரிமிதமான விலை கொடுத்து இவைகளை வாங்கவேண்டியிருந்தால், ஸ்டேட் ட்ரேடிங் கார்ப்பரேஷன் மூலமாக இதை இறக்குமதி செய்து, மின்சார இலாகாவே விநியோகத்தை ஏற்று நடத்தலாம். அதை யாரும் ஆட்சேபிக்கவில்லை. அப்படியில்லையென்றால், கூட்டுறவு சங்கங்கள் மூலமாக இதையெல்லாம் விநியோகிக்க ஏற்பாடு செய்யலாம். கூட்டுறவு சங்கங்களுக்கு இதை ஒப்படைத்து, யார் யாருக்குப் புது 'கனெக்ஷன்' கொடுக்கப் படுமோ அவர்களுக்கு மாத்திரம் இவைகளைக் கொடுக்கலாம் என்ற நிபந்தனை போல ஏற்பாடு செய்தாலுங்கூட சௌகரியமாக இருக்கும். இது பல நாட்களாக வற்புறுத்திச் சொல்லப்பட்ட விஷயம். இதை உடனடியாக மேற்கொண்டு ஏற்பாடு செய்யவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கின்றேன்.

மேலும், கூட்டுறவு இயக்கத்தின் மூலமாக தொடங்கக் கூடிய தொழிற்சாலைகளைப் பொறுத்த வரையில், அவைகளுக்கு 'டாப் ப்ரையாரிடி' கொடுத்து மின்சார 'கனெக்ஷன்' கொடுக்க வேண்டும். கூட்டுறவு இயக்கம் மூலமாக நிறுவப்பட்ட பல பெரிய தொழில்கள் மின்சார சப்ளை கிடைக்காத காரணத்தால் வேலையைத் தொடங்காமலிருக்கின்றன. மற்ற துறையினர் ஆரம்பிக்கக்கூடிய தொழில்களை விட, கூட்டுறவுத் துறையில் ஆரம்பிக்கப் படும் தொழில்களுக்குப் 'டாப் ப்ரையாரிடி' கொடுத்து, மின்சாரம் கொடுக்கப்பட்டிருந்தால், இன்னும் சற்று முன்னதாக வேலை துவக்க சௌகரியமாக இருந்திருக்கும். அந்த அளவு இதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, அமைச்சர் அவர்கள் கொண்டுவந்த திட்டத்தை ஆதரித்து என்னுடைய உரையை முடித்துக் கொள்கின்றேன்.

**SRI V. SANKARAN:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ஒரு ராஜ்யத்தின் வளர்ச்சியை, அந்த ராஜ்யத்தில் ஏற்பட்டிருக்கும் மின்சார முன்னேற்றத்தை அளவுகோலாகக் கொண்டு, நிர்ணயித்துக்கொள்ள முடியும். அந்த முறையில் பார்த்தால், உண்மையிலேயே நம்முடைய ராஜ்யம் மின்சாரத் துறையில் அதிகமாக வளர்ச்சி அடைந்திருக்கிறது என்பதைப் பற்றி அறிக்கையிலேயே விவரமாகப் புள்ளிவிவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட ஆரம்பத்தில் இருந்ததைப் போல் இரட்டிப்பு மடங்கு, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவில், மின்சாரத் துறையில் முன்னேறியிருக்கிறோம். அதுபோல், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலும் மின்சார உற்பத்தி மேலும் இரட்டிக்கப்பட்டு, அந்த அளவு விநியோகிக்கப்பட்டு, நாட்டு மக்கள் நன்மை அடைவார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. அதற்கான வகை செய்யப்பட்டிருக்கிறது. உண்மையிலேயே நான் மிகவும் பாராட்ட வேண்டிய விஷயம் என்னவென்றால், பிற

18th August 1961] [Sri V. Sankaran]

ராஜ்யங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, நம் ராஜ்யத்தில் எந்த எந்த இடத்தில் மின்சாரம் உற்பத்தி செய்ய வாய்ப்பு இருக்கிறதோ அதையெல்லாம் கண்டுபிடித்து, நல்ல முறையில் பயன்படுத்திக் கொண்ட காரணத்தினுல் நம் ராஜ்யம் மின்சாரத் துறையில் வளர்ச்சி அடைந்திருக்கிறது என்பது உண்மையிலேயே பெருமைப்பட வேண்டிய விஷயம்.

சர்க்காரிடமிருந்து 'காபிடல் எக்ஸ்பெண்டிசர்'க்காக கடன் வாங்கப்படுகிறது. 5-1/4 சத விகித வட்டிக்குக் கடன் வாங்கப்படுகிறது. அந்த வகையில் சென்ற வருஷத்தில் 5 கோடி ரூபாயும், வருகிற வருஷத்தில் 6 கோடி ரூபாயும் வட்டியாகச் செலவிடப்படுவதாக இருக்கிறது. எலெக்ட்ரிஸிடி போர்டைப் பொறுத்த வரையில், அதை ஒரு தனிப்பட்ட 'இன்டிவிடுயல்' ஆகக் கருத முடியாது. ஏனென்ருல், அது சர்க்காருடைய வேலையையே செய்கிறது. தனித்து நல்ல முறையில் இயக்கவேண்டுமென்று ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அதனிடம் வட்டி வாங்குவது கூடாது. நாலு சத விகிதத்திற்குக் கடன் வாங்கி, அதற்கு 5-1/4 சத விகிதம் வட்டி விதிப்பதோ, 2-3/4 சத விகிதம் வட்டிக்குக் கடன் பெற்ற பணத்தைக்கொடுத்து 4 சத விகித வட்டி விதிப்பதோ கூடாது. எலெக்ட்ரிஸிடி போர்டை சர்க்காருடைய பாகமாகத் தான் எடுத்துக்கொள்ளவேண்டும். பொதுமக்களுடைய நன்மைக்காக இயங்கும் ஸ்தாபனம் அது. கமர்ஷியல் பாடியாகவோ, ப்ரைவேட் பார்ட்டியாகவோ அதைக் கொள்ளக் கூடாது. 'மார்ஜின்' வைக்காமல் அரசாங்கம் எலெக்ட்ரிஸிடி போர்டுக்கு உதவ வேண்டும். அப்படிச் செய்தால், இந்த மார்ஜின் தொகையான இரண்டு கோடி ரூபாய் எலெக்ட்ரிஸிடி போர்டுக்கு மிச்சப்படும். அதைக்கொண்டு மேலும் விஸ்தரிப்பு வேலை செய்ய முடியும். ஊழியர்களுக்கு நல்ல வசதிகள் செய்வதற்காவது அந்தத் தொகையைப் பயன்படுத்தலாம். 'வசதி இல்லை' என்று சொல்வதற்குப் பதிலாக, அந்தத் தொகையை அவர்களுக்குச் செலவிடலாம். ஆகவே, இந்த 'மார்ஜின்' வசூலிக்கக்கூடாது என்று தெரிவித்துக்கொள்கின்றேன்.

எந்த எந்தப் பகுதியை மின்சார விஸ்தரிப்புக்கு எடுத்துக் கொள்வது என்பதுபற்றி ஏற்கனவே முடிவு செய்திருக்கிறோம் என்றும், எங்கெங்கு இருந்து மக்கள் கோரிக்கை வருகிறதோ அந்தப் பகுதிகளை எடுத்துக்கொள்வதற்கு சர்க்காரிடமிருந்து உத்தரவு பெறுவதற்கு போர்டு ஏற்பாடு செய்திருக்கிறது என்று சொல்லப்படுகிறது. சில இடங்களில் பொது மக்களிடமிருந்து கோரிக்கை வாராமல் இருக்கலாம். அதனுல், அந்தப் பகுதிகளை விட்டு விடக்கூடாது. உண்மையிலேயே பின்னடைந்த பகுதியாக இருக்கலாம். ஆனல், அங்கிருந்து கோரிக்கை வாராவிட்டாலும் கூட, முன்னுல் ஒரு கனம் அங்கத்தினர் கூறியதுபோல், அத்தகைய இடங்களை ஒரு கமிட்டி மூலமாகவாவது நல்ல முறையில் பரிசீலனை செய்து, பின்னடைந்த இடங்களுக்கு மின்சார விஸ்தரிப்பு செய்ய ஏற்பாடு செய்யவேண்டும்.

கோரிக்கை வந்தால்தான் எடுத்துக்கொள்வது என்ற நிபந்தனை இருக்கக்கூடாது. உண்மையிலேயே பின்னடைந்திருந்தால், அந்தப் பகுதிகளைப் பரிசீலனைக்கு, அங்கு மின்சார விஸ்தரிப்பு செய்ய போர்டார் தக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கின்றேன்.

அனல் மின்சார நிலையங்கள் தனியார் ஆரம்பித்தாலும் அவர்களுக்கு அனுமதி கொடுக்கப்படலாம் என்று சூசகமாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ஏற்கனவே தொழில் அபிவிருத்தி ஏற்பட்டிருக்கும் இடங்களிலேயே மேலும்மேலும் குவியலாக தொழில்கள் வளரும் அளவுக்கு அனல் மின்சார நிலையத்தை வைப்பதைவிட, பின்னடைந்துள்ள இடங்களில் இதுபோன்ற நிலையங்களை ஆரம்பிக்க வேண்டும். பின்னடைந்த இடம் பின்னடைந்திருக்கும் நிலைமைக்கு விட்டுவிடக்கூடாது. பின்னடைந்த இடங்களுக்கு முதல் இடம் கொடுக்கப்படவேண்டும். பம்ப் செட்களுக்கு மின்சாரம் வழங்குவதிலும் இந்த முறையைக் கையாளவேண்டும்.

நம்முடைய ராஜ்யத்தில் அதிகமாக நீர் மின்சார உற்பத்தியை நம்பியிருக்கிறோம். பருவ மழை தவறிவிட்டால் மின்சார சப்ளை பெருமளவு தடைபட்டு, பற்றுக்குறை ஏற்படும் நிலைமை இருக்கிறது என்று அறிக்கையிலே சொல்லப்பட்டிருக்கிறது. இதே முறையில் விஸ்தரித்துக் கொண்டு போவதில் மேலும் ஆபத்து அதிகரிக்கும் நிலைமை இருக்கிறது. ஆகவே, அணு மின்சார உற்பத்தி நிலையம் வேண்டுமென்று பல காலமாகச் சொல்லி வருகிறேன். இது அவசியம் என்றும் தெரிகிறது. இந்த ஐந்தாண்டுத் திட்டத்தில் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை சீக்கிரத்தில் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ள விரும்புகிறேன்.

12-30 p.m. மினிமம் சார்ஜ் வஜா செய்யும்போது வில்லேஜ் ஆபீசர் ரிப்போர்ட் வரவேண்டும் என்கிறார்கள். அதுவும் காலம் கடந்து வருவதனால் தொல்லை ஏற்படுகிறது. அதோடு 'கம்ப்ளீட் டிரை' என்று வந்தால் தான் வஜா அளிக்கிறார்கள். முழுக்க வரண்டதற்கு மட்டும் தான் என்பதனால் சரியாக இருக்காது. ஆகவே அதையும் ஓரளவு கவனித்து நியாயமான முறையில் பரிசீலனை செய்து அவசியமானவற்றுக்கு வஜா அளிக்கும் வகையில் தக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன்.

இன்னொன்று, டாரிப் சம்பந்தமாக டொமஸ்டிக் பர்பஸ், டொமஸ்டிக் குட்ஸ் பாக்டரி சம்பந்தப்பட்ட வரையிலாவது கூடுதலாகதபடி பார்த்துக்கொள்ள வேண்டும். உணவு, ஆடை முதலிய அத்யாவசிய பண்டத் தொழிற்சாலைகளை நீக்கிவிட்டு மற்றவற்றுக்குக் கொஞ்சம் கூடப் போட்டாலும் மக்கள் எதிர்க்க மாட்டார்கள். சாதாரண கன்ஸ்யூமர்களுக்கு உயராமல் அத்யாவசியப் பண்டத் தொழிற்சாகளுக்கு உயராமல் பார்த்துக் கொள்ளவேண்டும், கொஞ்சம் குறைந்தால்கூட நன்றாக இருக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

18th August 1961] [Sri V. Sankaran]

அடுத்தபடியாக ஊழியர்கள் சம்பந்தப்பட்ட பல நல்ல வசதிகளைச் செய்யப் போவதாகச் சொல்லியிருக்கிறார்கள். தாராளமுறை பென்ஷன், க்ராஜுடி, வீட்டுவசதி இவையெல்லாம் அளிக்கப்படும் என்று புதிய பே ரிவிஷன் ப்ரபோசல் இருக்கிறது என்றும் சொன்னார்கள். எல்லாம் வரவேற்கவேண்டியது தான். இருந்தாலும் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறபடி ஒன்று இரண்டு விஷயங்கள் கவனிக்கவேண்டும். அதில் நியாயம் இருக்கிறது. வேறுபல கோரிக்கைகள் இருந்தாலும் கூட இவை கவனிக்கப் படவேண்டும். ஏற்கனவே மின்சார போர்டு அமைக்கப் படுவதற்கு முன்பு அங்கே வேலை செய்தவர்களுக்கு என்.ஜி.ஓ. க்களுக்கு கொடுக்கப்பட்டதைவிட ஐந்தாறு ரூபாய் அதிகமாகவே ஊதியம் இருந்தது. இப்போதும் என்.ஜி.ஓ.-க்களுக்குக் கொடுப்பதைவிட அதிகமாக முன் இருந்த ப்ரபோர்ஷனில் சம்பளத்தை உயர்த்தவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறார்கள். இதையும் பரிசீலனை செய்யவேண்டும்.

அடுத்தபடியாக வொர்க் லோட் முன்பு 480 சர்விஸ் கனெக்ஷன் என்றால் இப்போது 600-க்கு மேல் ஆகிவிட்டது. மேலும் டைரெக்ட் ரெக்ரூட் வேறு இருக்கிறது. இதன் காரணமாக பத்து, எட்டு வருஷம் வேலை செய்தவர்களுக்குக் கூட யு.டி. போஸ்ட் கிடைப்பதற்கு வழியில்லாமல் இருக்கிறது. இதற்கும் ஏதாவது பரிகாரம் உண்டா என்று பார்க்கவேண்டும். இதே சர்வீஸ் இருந்தால் போதும், இதர இலாக்காக்களில் ப்ரமோஷன் கிடைக்க சான்ஸ் இருக்கிறது, இங்கே இல்லை. மேலும் முனிசிபாலிடி சர்விஸ்களை இணைக்கிறபோது சில பெரிய முனிசிபாலிடிகளை விட்டுவிட்டு சின்ன முனிசிபாலிட்டிகளை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். இதனால் அங்கே பல ஆண்டுகாலமாக வேலை செய்துவந்தவர்களுக்கு இப்போது மிகக் குறைந்த காலத்திற்குள் இங்கே வேலை செய்தவர்களுக்கு ப்ரமோஷன் கிடைத்து விடுகிறது. ஆகவே இதையும் கவனிக்கவேண்டும். இங்கேயுள்ளவர்கள் எங்களுக்குப் ப்ரமோஷன் கிடைக்கவில்லையே என்று சொல்கிறார்கள்.

அடுத்தபடியாக எங்கள் ஊரில் பாபநாசம் சம்பந்தப்பட்ட வரையில் 1—4—1961-ல் ஊழியர்கள் ஒரு டெமான்ஸ்ட்ரேஷன் செய்தார்கள். அதற்குப் பிறகு அந்த டெமான்ஸ்ட்ரேஷனில் கலந்து கொண்ட சிலருக்கே ப்ரமோஷன் கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்போது வேறு சிலருக்கு ப்ரமோஷன் சான்ஸ் வருகிறபோது டெமான்ஸ்ட்ரேஷனில் கலந்துகொண்டதால் முடியாது என்று சொல்கிறார்கள். நடவடிக்கை எடுக்கவேண்டியதுதான். ஆனால் அதில் ஈடுபட்ட ஒரு சிலரையே முன்பு ப்ரமோஷன் செய்துவிட்டு, இப்போது வேறு சிலருக்கு அந்தக் காரணத்தைக் காட்டுவது சரியாகாது. இது நியாயமும் அல்ல என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

[Sri V. Sankaran] [18th August 1961

கடைசியாக ஒரே ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். இந்த போர்டு நன்றாக வேலை செய்து வருகிறது. இருந்தாலும் இன்னும் அதிகமான டெக்னிகல்மென்களையே இதில் போடவேண்டும். அப்போதுதான் அதிகமான வேலை செய்வதற்கு இன்சென்டிவ் இருக்கும். சேர்மென்னைக்கூட அப்படிப் போடவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI M. P. SARATHI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, மின்சார போர்டு வரவுசெலவு அறிக்கையின் மீது எனது கருத்தைச் சொல்ல விரும்பகிறேன். குறிப்பாக மின்சாரம் நாட்டு மக்களுக்கு எவ்வளவு பிரமிக அவசியமானது, தேவையானது என்பதை நான் சொல்லவேண்டுவது இல்லை. இதை யாரும் மறுக்க முடியாது. ஆனால் இதை விரிவு படுத்தும்போது குறிப்பாக சில இடங்கள் விரிவைப்படுத்தப்படுவதும், சில இடங்கள் வேண்டுமென்றே விரிவுபடுத்தப்படாமல் இருப்பதும் அரசியல் காரணங்களின் அடிப்படையில் செயல்படுகிறார்களோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது. என் தொகுதியைப் பொறுத்த வரையில் வேலூருக்கு அருகில் உள்ள கிராமங்களுக்கு மின்சாரம் பல வருஷங்களாக விஸ்தரிக்கப்படவேயில்லை. இதை நான்கு வருஷங்களாக இந்தச் சபையில் சொல்லி வந்திருக்கிறேன். அங்குள்ள சந்திரி கம்பெனியார் முன்பு பணம் இல்லையென்றார்கள். சர்க்கார் இப்போது கடன் கொடுத்தும் அவர்கள் விஸ்தரிக்கவில்லை. அமைச்சர் அவர்களே அவர்களைச் சந்தித்து மாற்றுக் கட்சியினரின் இடம் இது, ஆகவே விஸ்தரிக்காதீர்கள் என்று சொல்லியிருக்கிறார்களோ என்று சந்தேகப்படவேண்டியிருக்கிறது. ஏன் அரசாங்கம் சோஷலிஸ்டுத் திட்டத்தின்கீழ் செயல்படுகிறோம் என்று சொல்லும்போது இப்படி ஏன் ஒரு கம்பெனிக்கு முப்பது வருடங்களாக லைசென்ஸ் கொடுத்து ஒவ்வொரு பகுதிக்கும் பாரபட்சம் காட்டுகிறது. அதை விடுத்து உடனடியாக அந்த நகரத்து அருகில் உள்ள கிராமங்களுக்கெல்லாம் மின்சாரம் உடனடியாக சப்ளை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். முன்பு இரண்டு மூன்று கிராமங்களுக்கு மட்டும் மின்சாரம் சப்ளை செய்வதற்கு மின்சார போர்டாரிடம் கொடுத்தார்கள். அவர்களும் அதற்கு ஏதோ முயற்சி செய்தார்கள். இரண்டாண்டுக்கு மேலாகவே விவசாயிகளிடம் இருந்தும், மற்றவர்களிடம் இருந்தும் மின்சாரம் தேவை யாருக்கு என்று காரணம் வாங்கினார்கள். இருந்தாலும் இன்றுவரையில் அக்ரிமெண்டு செய்துகொடுத்திருந்தும் மின்சாரம் சப்ளை செய்யப்படவில்லை. சில கிராமங்களுக்கு பம்பு செட்டு வைக்கப்பட்டும் கனெக்ஷன் கொடுக்கப்படவில்லை.

வடவேலூர், தென் வேலூர் பகுதிகளை கார்ப்பரேஷன் எடுத்து நடத்த முடியாமல் போனால் மின்சார போர்டாவது அதை உடனடியாக எடுத்து நடத்தினால்தான், வேலூரை அடுத்த கிராமங்கள், டவுன் போன்ற கிராமங்கள் இருள் அடைந்து கிடப்பதை போக்கவும், விவசாயிகளின் கஷ்டத்தைப் போக்குவதற்கு உள்ள நிலை ஏற்படும். விவசாயிகள் எவ்வளவு போராடியும், கடைசியாக

வரும்போது பாலாறு பேஸின் ரூல்ஸ்-ல் முடியாது என்று கை விரித்து விடுகிறார்கள். பாலாறு நடுக்காவாயிலிருந்து அளவு போடுவதா அல்லது சிறிய காவாயிலிருந்து அளவு போடுவதா என்பதெல்லாம் குறித்து, அதன் ரூலஸ் போர்டாருக்கு கூட தெரியவில்லை என்கிறார்கள். ஆகவே, இதையெல்லாம் கவனித்து பாலாற்றின் ஓரமாகயிருந்தாலும் அதற்கு வேண்டிய வசதி செய்து கொடுத்தால்தான் பாலாற்றின் ஓரமுள்ள கிராமங்களுககு வழி பிறக்குமே தவிர இல்லாவிடில் அவர்களுக்கு வழி ஏற்படவே ஏற்படாது. இரண்டு, மூன்று ஆண்டுகளுக்கு முன்பு பாலாற்றுக்கு அடுத்து 10, 20 அடி வரையில் கூட பம்ப் செட்ஸ் கொடுக்கப் பட்டது.

ஆனால், இப்பொழுது 500, 1,000 அடிக்கு அப்புறம் கூட கொடுக்க முடியாது என்று சொல்கிறார்கள். ரூலஸ்க்கு விரோதம் இல்லா மல், 1,000 அடிக்கு அப்புறப்பட்டு இருக்கிறது, வேண்டுமானால் அளவு எடுத்து பம்ப் செட்ஸ் கொடுங்கள் என்றால் பி.டப்ளியூ.டி. என்ஜினியரிடமிருந்து இதற்கு ஒரு சர்டிபிக்கேட் வாங்கி வந்தால் தான் கொடுப்போம் என்று அங்கே அனுப்பி விடுகிறார்கள். பி.டப்ளியூ.டி. என்ஜினியரிடம் போய் கேட்டால் அதற்கும் எங்க ளுக்கும் என்ன இருக்கிறது எங்களிடம் கேட்டால் அப்பொழுது வேண்டுமானால் அதைப்பற்றி சர்டிபை செய்கிறோமே தவிர நீங்கள் சொல்வதற்காக சர்டிபை செய்ய மாட்டோம் என்று சொல்கிறார் கள். ஆக, அங்கு விவசாயிகள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். நான்கு ஆண்டு காலமாக இந்த மன்றத்தில் சொல்லிவந்த போதி லும் எங்கள் பகுதியில் கிராமங்களில் மின்சாரம் பரவவில்லை என்று சொல்லிக்கொள்வதோடு உடனடியாக வேலூர் கார்ப்பரேஷன் மின்சாரத் திட்டத்தை சர்க்கார் ஏற்றுக் கொண்டு அங்குள்ள கிராமங்களில் எல்லாம் மின்சாரத்தை விரிவுபடுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இன்னொரு முக்கிய விஷயம். கார்ப்ப ரேஷன் செய்வது என்னவென்றால் திருமண வீட்டிற்கு 500 வாட்ஸ் விளக்கு எறிய வேண்டுமென்றாலும் அதற்கு தனியாக 25 ரூபாய் கட்ட வேண்டும். வீட்டிலிருந்து வெளியே கொண்டு வந்து மின் சார விளக்கு எறிவதற்கு பீஸ் கட்டவேண்டும். வீட்டிலிருந்து தெரு பக்கம் வரக்கூடாது, என்று கண்டிப்பாக உத்தரவிடுகிறார் கள். அப்படிக் கொண்டு வந்தால் உடனே ப்யூஸை எடுத்து விடுகிறார்கள். பின்னர், பொதுக் கூட்டம் நடத்துவதற்கு மின் சாரம் வேண்டுமென்று கேட்டால், ஒரு இரண்டுமணி நேரத்திற்கு வேண்டுமென்று கேட்டால் அதற்கு ஏறக்குறைய இரண்டு மூன்று வருடங்களுக்கு முன்பாக ரூ. 9-6 அணா வாங்கி வந்த அதே மின் சார கார்ப்பரேஷன் இப்பொழுது ரூ. 24-65 ந.பை. கட்டவேண்டு மென்று சொல்கிறார்கள். அப்படியே கட்டி விடுகிறோம் என்று சொன்னாலும் அதற்கு மேல் மீட்டருக்கு 40 ரூபாய் கட்டவேண்டு மென்று சொல்கிறார்கள். இரண்டு மணி நேர அலுவலுக்கே இப்படி என்றால், மின்சாரம் பெருகி எங்கும் அது ஊடுருவிப் பாய் கிறது என்று சொல்லிக் கொள்வதில் சந்தேகப்பட வேண்டியிருக்

கிறது. ஆகவே, இதைக் கவனித்து பழைய நிலவரப்படி ரூ. 9-6 அணு என்று ஆக்கிவிட்டாலும் பரவாயில்லை. இரண்டு மணி நேரம் பொதுக் கூட்டத்திற்கு மீட்டர் போடுகிறார்கள் என்றால் அதற்கு டெப்பாஸிட் கட்டவேண்டுமென்று சொன்னால் எப்படி மக்களுக்கு நல்ல விஷயங்களைப் போதிக்க முடியும், எப்படி நமது கருத்துக் களைச் சொல்ல முடியும். இதை அமைச்சர் அவர்கள் உணர்ந்து வேண்டிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். அரியூர், ஊசூர், அத்தியூர், பூதூர் போன்ற இடங்களுக்கு பணம் ஒதுக்கப்பட்டிருக் கிறது. டெவலப்மென்ட் கவுன்ஸில் கூட்டத்தில், சூப்பரன்டென்டிங் என்ஜினியரிடம் கேட்டபோது இதோ செய்து விடுகிறோம், இரண்டு மாதங்களில் செய்து விடுகிறோம் என்று சொன்னார்கள். அமைச்சர் அவர்கள் சொல்லியிருப்பார்களோ என்னவோ, தேர்தல் ஆறு மாதத்தில் வருகிறது, அது கழிந்த பிற்பாடு போடலாம், இப் பொழுது அதற்கு முன் போட்டால் எதிர்கட்சியினர் வாதாடி கொண்டு வந்து விட்டார்கள் என்று மக்கள் நினைப்பார்கள் ஆகவே ஆறு மாதம் கழித்து போடுங்கள் என்று சொன்னார்களோ என்னவோ? ஆனால் அரசாங்கத்தில் உள்ளவர்கள் அப்படி சொல் லக்கூடாது. வேலூர் கார்ப்பரேஷன் சொல்வது, நாங்கள் சாங்க் ஷன் செய்திருக்கிறோம், கடனும் வந்திருக்கிறது ஆனால் போஸ்ட்ஸ் வர வில்லை என்று சொல்கிறார்கள். எப்பொழுது கேட்டாலும் போஸ்ட்ஸ் வரவில்லை என்று சொல்கிறார்கள். ஏன் வரவில்லை என்று கேட்டபோது அங்குள்ள ஒரு காங்கிரஸ்காரர் அந்த போஸ்ட்டுக்கு கண்ட்ராக்ட் எடுத்திருக்கிறார்கள். ஆகவே, அவரை அதட்டிக் கேட்க முடியவில்லை. ஒரு அரசியல் கட்சியைச் சேர்ந்த வர் கண்ட்ராக்ட் எடுத்திருக்கிறார் என்பதற்காக ஒரு ஊரையே நாசமாக்கக் கூடாது. அடுத்து, அங்குள்ள மின்சார ஊழியர் களின் நிலை தற்காலீக ஊழியர்கள் என்ற நிலையில்தான் அவர்கள் இருக்கிறார்கள். அவர்களை நிரந்தரமாக்க வேண்டும். அதோடு, ஆக்ஸிடெண்டினால், சென்னையில் கூட இப்பொழுது மூன்று பேர் கள் இறந்ததாக கேள்விப்படுகிறோம். இப்படி நேர்ந்ததற்கு யார் காரணம், ஏன் அப்படி ஏற்பட்டது என்று நன்கு விசாரித்து அதற்கு வேண்டிய பரிகாரம் செய்து கொடுப்பதுடன், இறந்த ஊழியர்களின் குடும்பத்தைச் சார்ந்தவர்களின் பாதுகாப்பிற்கு ஒரு நிதியை இந்த அரசாங்கம் கொடுத்து உதவ வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

SRI K. S. ARTHANAREESWARA GOUNDER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கக் கூடிய இந்த மின்சார இலாகா வரவு-செலவுத் திட்டத்தை ஆதரித்து சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். குறிப்பாக சென்ற மாதம் வந்த வெள்ளத்திலும் மேட்டூர் மின்சார நிலயம் காப்பாற்றப்பட்டதானது உண்மையிலேயே அங்குள்ள அதிகாரி களின் முயற்சியினால் என்றே சொல்ல வேண்டும். மேட்டூர் அணையைக் கட்டும்போது அந்த அணையிலிருந்து பிரவாகம் வெளியே எப்படிச் செல்வது என்பதற்கு திட்டம் போட்டிருக்

கிருர்களே தவிர அந்த மின்சார நிலேயத்தை எப்படி பாதுகாப்பது என்பதில் சிறு தவறு ஏற்பட்டிருக்கிறது என்பதை அமைச்சர் அவர்களுக்கு தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். குறிப்பாக சென்ற வெள்ளத்தில் அணேயிலிருந்து 3 லட்சத்தி ஐயாயிரம் க்யூசக்ஸ் தண்ணீர் வெளியே விடப்பட்டது. அதே அணேயில் இன்னும் அதிகம் தண்ணீர் வந்திருந்தால் மேட்டூர் மின்சார நிலேயமானது வெள்ளத்தால் பாதிக்கப்பட்டிருக்கும் என்பதை சர்க்கார் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். இதை ஏன் சொல்கிறேன் என்ருல் உடனடியாக அணேயிலிருந்து 570,000 அல்லது 6 லட்சம் க்யூசக்ஸ் தண்ணீர் வந்தாலும் அந்த நிலேயத்திற்குப் பாதகம் இல்லாமல் செய்வதற்கு திட்டத்தை உடனடியாக தீட்ட வேண்டுமென்று சர்க்கார் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். ஐந்து லட்சம் அளவிற்கு வந்திருந்தால் உண்மையில் மேட்டூர் மின்சார நிலேயமானது பாதிக்கப்பட்டு பல லட்சக்கணக்கான தொழிலாளர்கள் வேலே இழக்கக்கூடிய நிலேயில் இருந்திருப்பார்கள். இயற்கையின் நன்மை காரணமாகவும், அங்குள்ள அதிகாரிகள் நல்ல முறையில் நிர்வகித்தது காரணமாகவும் அவர்களே பாராட்டுகிறேன். இப்பொழுது நடக்கக் கூடிய குகை மின்சார நிலயத்தைக் கூட 6 லட்சம் க்யூசக்ஸ் தண்ணீர் வந்தாலும் அதை பாதிக்காத முறையில் அந்த நிலயத்தை அமைக்கவேண்டுமென்று சர்க்காரின் கவனத்திற்கு கொண்டுவருகிறேன். எவ்வளவு பிரவாகம் வந்தாலும் கூட நம் மின்சார இலாகா என்ஜினியர்கள் குகை மின்சார திட்டவேலேயை ஒரு நிமிஷங்கூட நிறுத்தாமல், 120 அடிக்கு கீழ் ப்ரஷர் இருக்கும் அந்த வேலேயை தாமதப்படுத்தாமல் நடத்தியது மின்சார இலாகாவின் திறமை என்றே சொல்ல வேண்டும். இதைப்பற்றி பலர் பயந்தார்கள். பக்கத்தில் இருக்கக்கூடியவர்கள் குகையை வெட்டி எடுப்பதற்காக மின்சார டைனமிட்டர் உபயோகிக்கும் போது அணேக்கே இவர்கள் வெடி வைத்துவிடுவார்களோ என்றெல்லாம் கூட சொல்லிக் கொண்டிருந்தார்கள். இதையெல்லாம் பொருட்படுத்தாமல் குறித்த காலத்தில் வேலேயை முடிக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் வேலேயை தொடர்ந்து நிறைவேற்றிக்கொண்டிருக்கிருர்கள். இது மிகவும் போற்றத்தக்கதாயிருக்கிறது. எனக்கு முன்பு பேசிய அங்கத்தினர் அவர்கள் கட்சிப் பிரசாரத்திற்காக மின்சார அபிவிருத்தியை செய்து வருகிருர்கள், சர்க்கார் கட்சிக்குத்தான் இது அனுகூலமாக இருக்கிறது என்று சொன்னதைக் கேட்டு நான் மிகவும் வருந்துகிறேன். உண்மையில் அந்த அங்கத்தினர் அவர்கள் மேட்டூரில் நடக்கும் குகை மின்சாரத் திட்டம், குந்தா மின்சாரத்திட்டம், இவைகளேப் போய் பார்த்தால், இந்தத்திட்டங்கள் எல்லாம் கட்சிக்காக நடைபெறுகிறதா அல்லது நாட்டு மக்களுககாக நடைபெறுகிறதா என்பதை தெரிந்து கொள்ள வாய்ப்பு இருக்கும். அவைகளே ஒன்றும் பார்க்காமல் சட்டசபையில் இவ்விதம் பேசிவிட்டால் எந்தவித பயனும் ஏற்படாது. அங்கு வேலே செய்கின்ற தொழிலாளர்கள், இன்சினியர்கள் இவர்கள் எல்லாம் போற்றப்பட வேண்டியவர்கள். மழை இல்லாத காலத்தில்,

[Sri K. S. Arthanareeswara Gounder] [18th August 1961

தண்ணீர் குறைவாக இருக்கக்கூடிய நேரத்தில் மின்சார வெட்டு ஏற்படாத முறையில் மேட்டூர் அணையை இன்னும் 10 அடி உயர்த்தி விட்டால் போதுமானது என்று இங்கு நான் பல தடவை கூறி யிருக்கிறேன். அப்படி உயர்த்திவிட்டால் இப்போது ஏற்பட்ட 15 நாட்கள் மின்சார வெட்டுக்கூட ஏற்படாது என்பதை தெரிவித் துக்கொள்கிறேன். இன்னும் 10 அடி உயர்த்துவதற்கு முன்னு லேயே அஸ்திவாரங்கள் எல்லாம் போடப்பட்டிருக்கிறது என்கிற விபரத்தை மேட்டூர் சரித்திரத்தை எழுதிய இன்சினியர்கள் எழுதி யிருக்கிறார்கள். ஆகவே இதைப்பற்றி பரிசீலனை செய்து மைசூர் சர்க்காரிடத்திலும், மத்திய சர்க்காரிடத்திலும் எடுத்துச்சொல்லி நடவடிக்கை எடுத்தால் மின்சார வெட்டே ஏற்படுவதற்கு வழி யில்லை என்பது என் அபிப்பிராயம்.

மேலும், மின்சார அபிவிருத்தித்திட்டத்தில் ஹொகனக்கல் திட்டம், மேகதாட் திட்டம் முதலியவைகள் இந்த அறிக்கையில் இல்லாமல் இருப்பதைப்பார்த்து நாங்கள் வருந்துகிறோம். இவை களையும் திட்டத்தில் உடனடியாக சேர்க்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம். எங்களுடைய சேலம் மாவட்டத்தைப் பொறுத்த வரையிலும் பல இடங்களிலும் மின்சார விஸ்தரிப்பு பொறுப்பு எஸ்.ஈ.டி. கம்பெனியில் இருப்பதால் பல இடங்களிலும் மக்கள் பம்ப் செட் வைப்பதற்கு கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே மின்சார இலாகாவே அதை எடுத்து விவசாயிகளுடைய கஷ்டங்களை நிவர்த்தி செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, மின்சார இலாகாவின் கீழ் வேலைசெய்து வரும் கீழ்த்தர சிப்பந்திகள் பலரையும் தினக்கூலிகளாகவே வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த வேலைகளில் மிகவும் கஷ்டப்பட்டு உழைக்கும் இவர்களை எல்லாம் நிரந்தரமாக்கினால் தான் வேலை ஒழுங்காக நடப்பதற்கு வசதியாக இருக்கும். அவர் களுக்கும் வேலை செய்வதற்கும் உற்சாகமாக இருக்கும். பல வருஷங்களாக இவர்கள் தினக்கூலிகள் என்ற முறையில், அல்லது என்.எம்.ஆர். என்ற முறையில் இருந்து கொண்டிருப்பதால் அவர் களுக்கு வேலை செய்வதில் உற்சாகம் குறைந்து கொண்டிருக்கிறது. ஆகவே இவர்களை எல்லாம் பெர்மனன்ட்டாக்குவதற்கு தக்க நட வடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அப்படி இவர்களை நிரந்தரமாக்கி அவர்களுக்கு உற்சாகமூட்டினால்தான் திட்டத்தை எல்லாம் நல்ல முறையில் நிறைவேற்ற முடியும் என்பதை சர்க்காரின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, பம்ப்செட், மோட்டார், சுவிச் இவைகளை எல்லாம் டிப்பார்ட்மென்ட் மூலமாகவே கூட்டுறவு முறையில் வாங்கி கொடுத்தால் விவசாயிகளுக்கு சௌகரியமாக இருக்கும் என்பதையும் சர்க்காரின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்பு கிறேன்.

அடுத்தபடியாக, கிணறுகளில் பம்ப்செட் வைத்து தண்ணீர் இறைக்கும்போது தண்ணீர் மட்டம் கீழே போய்விடுகிறது. இம் மாதிரிப்பட்ட கிணறுகளில் டிரிலிங் செட் உபயோகித்து கிணறு களை ஆழப்படுத்துவதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். ஸ்டாகரிங் வரும்போது கிணறு களின் மட்டம் கீழே செல்லுகிறது. இந்த சமயத்தில் விவசாயி களுக்கு பலவிதமான கஷ்டங்கள் ஏற்படுகின்றது. அதோடு அவர்கள் கட்டணமும் கூடுதலாக கொடுக்கவேண்டியிருக்கிறது. இதையும் குறைத்துக் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள் கிறேன். அதோடு கிணற்றில் தண்ணீர் இருந்தால் மின்சாரம் கிடைக்காத நேரத்தில் வேறு விதங்களில் தண்ணீரை இறைத்துக் கொள்ள முடியும். எனக்கு முன்னால் நண்பர்கள் கூறியது போன்று விவசாயிகளுக்கு பொதுவாக கட்டணத்தை குறைத்துக் கொடுக்கவேண்டும். வேண்டுமென்றால் மில் வைத்திருக்கக்கூடிய வர்களுக்கோ மற்றவர்களுக்கோ கட்டணத்தை சிறிது உயர்த்திக் கொள்ளலாம் என்பது என் அபிப்பிராயம். அதோடு சிறு கைத்தொழில் வைத்திருப்பவர்களுக்கு மின்சார வசதி கிடைத் தால் அவர்கள் நல்ல முறையில் தொழிலை பெருக்க முடியும். அந்த முறையில் நாட்டுச்சர்க்கரை போன்றவற்றை உற்பத்தி செய்வதற்கு வசதியாக இருக்கும்.

அடுத்தபடியாக மேட்டூரில் இன்னும் சில கிராமங்களுக்கு அதா வது இரண்டு மைல்களுக்குள்ளில் இருக்கும் மூலக்காடு, காவேரி புரம், வெள்ளிரி வெள்ளி, சித்தூர் போன்ற கிராமங்களுக்கு இது வரை மின்சார வசதி இல்லாமல் இருப்பது மிகவும் வருந்தத்தக்க தாகும். மின்சார உற்பத்தி குறைவாக இருப்பதால் மின்சார வசதி செய்து கொடுப்பது கொஞ்சம் சிரமமாக இருக்கலாம். இருந் தாலும் கூட மின்சார நிலையத்திற்கு பக்கத்தில் இந்தக் கிராமங்கள் எல்லாம் இருப்பதால் உடனடியாக இந்தக்கிராமங்களுக்கு எல்லாம் மின்சார வசதி செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக கரண்ட் கட்-டை பொறுத்தவரையிலும் சென்ற ஆண்டுகளில் எல்லாம் ஸ்டாகரிங் வைத்திருந்தார்கள், பம்ப் செட் இன்னின்ன பகுதியில் இத்தனை மணி நேரம் தான் ஓடலாம் என்றெல்லாம் நிர்ணயித்திருந்தார்கள். இப்போது வெட்டு வந்த போது தொடர்ந்தாற் போல் 18 மணி நேரம் நிறுத்திவிட்டார்கள். இதனால் பலருக்கு நஷ்டம் ஏற்பட்டது. விவசாயிகள் எல்லாம் தெரிந்து கொள்ளக்கூடிய முறையில் அங்குள்ள அதிகாரிகள் நட வடிக்கை எடுக்கவில்லை என்பதை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். ஸ்டாகரிங் ஏற்படுகின்ற நேரத்தை தெரியப்படுத்தினால் விவசாயிகளுக்கு வசதியாக இருக்கும். அவ் விதம் ஒன்றுமில்லாமல் கீழேயுள்ள சிப்பந்திகள் மோசமான முறையில் நடந்துகொள்வார்கள் என்று எண்ணி அந்த லைனையே மேட்டூரில் இருந்து நிறுத்திவிட்டது மிகவும் வருந்தத்தக்கது. இந்த விஷயத்தில் முன் கூட்டியே நோட்டீஸ் கொடுத்திருந்தால்

[Sri K. S. Arthanareeswara Gounder] [18th August 1961

விவசாயிகளுக்கு அதற்குத் தகுந்தவாறு பம்ப்செட்களை ஓட்டுவதற்கு வசதியாக இருந்திருக்கும் என்பதை சர்க்காரின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

மேட்டூரில் நடைபெறக்கூடிய டன்னல் ஸ்கீமில் வேலை செய்யக்கூடிய அதிகாரிகளுக்கு வீட்டுவசதி செய்து கொடுத்திருப்பது மிகவும் போற்றத்தக்கது. அதேமாதிரி மின்சார நிலையத்தில் வேலை செய்யக்கூடிய தொழிலாளர்கள் இன்னும் பழைய வீட்டிலேயே இருக்கிறார்கள். இவர்களுக்கு விளக்கு வசதி, தண்ணீர் வசதி இவைகள் எல்லாம் இல்லாமல் அவர்கள் பழைய வீட்டிலேயே இருந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு நல்ல முறையில் வீட்டு வசதி செய்து கொடுக்கவேண்டும் என்பதை தெரிவித்துக் கொண்டு என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

* SRI S. SADASIVAM: மதிப்புற்குரிய சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கிற இந்த மின்சார அறிக்கையை ஆதரித்து ஒருசில வார்த்தைகள் பேச ஆசைப்படுகிறேன். நம்முடைய தமிழ் நாட்டிலே மின்சார உற்பத்தியும் வினியோகமும் நல்ல முறையிலே செயலாற்றப்பட்டு வருவது கண்டு நாம் மட்டுமல்லாமல் இதர மாநிலங்களிலேயும் இன்றையதினம் பாராட்டப்படுகிறது என்பதை நாம் அறிகிறோம். இந்த மின்சாரத் திட்டம் நல்ல முறையில் இயங்க விவசாயம், தொழில் போன்ற பல முற்போக்குத் திட்டங்களை நல்ல முறையில் அமைத்துக் கொடுத்த அமைச்சரவைக்கும் இந்த மின்சார போர்டாருக்கும், அதிலே பணி புரிகிற அதிகாரிகளுக்கும் நாம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். இன்று மின்சாரம் அதிகமாக பல இடங்களில் பரவினால்தான் இன்னும் அதிகமான உற்பத்தித் திட்டங்களை நாம் ஏற்படுத்த முடியும் என்ற அடிப்படை நோக்கத்துடனே இன்று மின்சார போர்டும் அரசாங்கமும் பல புதிய திட்டங்களை நிறைவேற்றி வருகிறார்கள். அதே சமயத்தில் மின்சாரத்தை வினியோகிக்கும் காலத்தில் பல கருவிகள், யந்திரங்கள் தேவைப்படுவதன் காரணமாக கால தாமதம் ஏற்படுவதைக் காண்கின்றோம். அந்த அடிப்படையில் மத்திய சர்க்காருடைய பெரிய திட்டமாக இயங்கக்கூடிய கனரக மின்சாரத் தொழிற்சாலையை திருச்சியில் அமைக்க வேண்டுமென்ற திட்டத்தை துரிதப்படுத்தி அந்தத் திட்டத்தை அதிக விரைவிலே நம் மானிலத்திற்குக் கொண்டுவர அரசாங்கம் ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்று நம் நாட்டின் பெரும் தொழிலாக இருக்கக் கூடியது விவசாயமே. விவசாயத்தை ஓரளவுக்கு நல்ல முறையிலே செய்ய வேண்டுமென்றால் மிக முக்கியமாக அமைந்திருப்பது மின்சாரம் என்பதை உணர்ந்திருக்கிறோம். ஒவ்வொரு விவசாயியும் தன்னுடைய உற்பத்தியை அதிகரிக்கவேண்டுமானால் செலவைக் குறைத்து நல்ல முறையில் விவசாயம் செய்ய இன்று மின்சாரம் மிக அவசியம் என்பதை உணர்ந்து தான் ஒவ்வொரு இடத்திலும் அதிகக் கோரிக்கைகள் இருக்கின்றன என்பதை நாம் உணர்

18th August 1961] [Sri S. Sadasivam]

கிறோம். அது மாத்திரமல்லாமல் இந்தக் கூட்டத்திலேயே கொண்டுவர இருக்கிற நிலச் சீர்திருத்தச் சட்ட அடிப்படையைப் பார்த்தால் குவிந்திருக்கிற நிலங்களை பகிர்ந்து கொடுத்து நல்ல முறையில் விவசாயியை ஊக்குவித்து உணவுப் பொருள்களை உற்பத்தி செய்ய வேண்டுமென்று கருதுகிற நாம் விவசாயிக்கு முக்கியமாக மின்சாரம் கிடைக்க வழி செய்யவேண்டுமென்பதை உணரவேண்டும். விவசாயத்திற்கு 20 சதவிகிதம் என ஒதுக்கப் பட்டிருப்பது மிகவும் குறைவான ஒரு மதிப்பீடு ஆகும் என்பதை உணர்ந்து, இதற்கு அநேகமாக சரி பாதியாக ஒதுக்கவேண்டும் என்று போர்டாரையும் அரசாங்கத்தையும் கேட்டுக் கொள் கிறேன். இன்னும் மின்சாரம் கொடுக்கிற இந்த நிலையில் கிராமங் களை அடிப்படையாக வைத்துக்கொண்டு பார்க்கவேண்டுமென்று அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்கிறேன்.

அம்மையார் சௌந்திரம் ராமச்சந்திரன் அவர்கள் கூறியது போல அதிக நீர்ப்பாசன வசதி செய்து கொடுத்திருக்கும் பகுதி களிலேயே மின்சாரத்தை அதிகரிப்பதை விட, நீர்வளம் குறைந்து விவசாயம் செய்வதற்கு ஆழமான கிணறுகள் தோண்ட வேண்டி யிருக்கிற வரண்ட பிரதேசங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமென்பதை உணர்ந்து, அவைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அப்படி அதிக மாக நீர்வளம் இருக்கிற பிரதேசத்திலேயே மின்சாரத்தை விருத்தி செய்துகொண்டுபோனால் நீர்வளமற்ற பிரதேச மக்க ளுக்கு உதவி செய்தவர்களாக ஆக மாட்டோம் என்று உணர வேண்டும். அதே சமயத்தில் சில பகுதிகளை பிற்பட்ட பகுதிக ளென்றும், சில பகுதிகளை முற்பட்ட பகுதிகள் என்று பிரித்து மினிமம் காரண்டி சார்ஜல் நிர்ணயம் செய்திருக்கிறார்கள். அதை எந்த அடிப்படையில் செய்திருக்கிறார்கள் என்று தெரிந்துக் கொள்ள முடியவில்லை. அநேகமாக என் பகுதி மிகவும் வரண்ட பகுதி என்று அமைச்சர் அவர்கள் உணர்வார்கள். கரூர் தாலுகாவில் அரவக்குரிச்சி பகுதிகள் இந்த பிற்பட்ட பகுதிகள் சேர்க்கக்கூடிய பகுதிகள் என்று அமைச்சர் அவர்களே சொன் ளுர்கள். திருச்சி ஜில்லாவிலே ஒரு சில பகுதிகள் சேர்க்கப் பட்டனவே தவிர என் பகுதி சேர்க்கப்படவில்லை. என் பகுதி யையும் பிற்பட்ட பகுதியாகச் சேர்த்து மினிமம் சார்ஜ் 35 ரூபாய் அளவில் கொண்டுவர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இப்போது அதிகமாக தொழில்பேட்டைகள் நகர்புறங்களில் ஏற்படுத்தப்படுவதால் அங்கு வேலை செய்யக் கூடியவர்களுக்குக் கிடைக்கக்கூடிய கூலியானது விவசாயக் கூலிகளுக்குக் கிடைக்கக் கூடிய கூலியைவிட அதிகமாக இருப்பதால், கிராமங்களை விட்டு நகரங்களை நோக்கி அவர்கள் வந்துகொண்டிருப்பதால் விவ சாயத்திற்கு தொழிலாளர்கள் கிடைக்காமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பதை அமைச்சர்கள் ஆங்காங்கு செல் லும்போது நேராகக் கண்டிருப்பார்கள். அந்த மாதிரி நிலைமை நீடிக்காமல் சிறு சிறு தொழில்பேட்டைகளையும் தொழில்கூடங் களையும் கிராமங்களில் அமைத்து, கிராமங்களில் ஏற்படுத்தக்

கூடிய மின்சார ஸ்கீம்களுக்கு 10 சதவீதம் கிடைக்கவில்லை என்று தள்ளப்படும் நிலைமையை மாற்றி, சிறு சிறு தொழில்கள் கிராமங்களில் ஏற்படும் வகையில் மின்சாரம் கிடைக்க வழிவகை செய்து கொடுக்கவேண்டுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

எனக்கு முன்பு பேசியவர்கள் சிலர் கம்பெனியாரின் ஆதிக்கத்தில் இருப்பதால் புறக்கணிக்கப்படுகிறது என்று சொன்னார்கள். ஆனால் நான் நினைக்கிறேன் கம்பெனியார்களின் பகுதியை விட போர்டாரின் கீழ் வரக்கூடிய எனது பகுதி மோசமாக இருக்கிறது என்று. நீண்ட நாட்களாக மின்சார விஸ்தரிப்பு செய்யப்படவில்லை. பல ஸ்கீம்கள் போட்டும் இன்னும் அமுல் நடத்தப்படாத நிலையில் இருக்கின்றன. அந்தப் பகுதியில் வேண்டிய அளவு மக்கள் முன் வந்தும் நடைபெறவில்லை என்பதை அமைச்சர் அவர்களுக்கும் இந்த இலாகாவினருக்கும் எடுத்துச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த வகையிலே நல்ல முன்னேற்றம் காண இன்னும் கொஞ்சம் அதிக கவனம் செலுத்தவேண்டுமென்று சொல்லிக்கொண்டு இந்த மின்சாரத் திட்டத்தை நல்ல முறையிலே இயக்கி வருகிற அமைச்சரவைக்கும் போர்டாருக்கும் நன்றி தெரிவித்து முடித்துகொள்கிறேன்.

* **SRIMATHI T. N. ANANDANAYAKI** : சபைத் தலைவர் அவர்களே, இன்று இந்த மின்சார போர்டைப் பற்றி பல அங்கத்தினர்கள் மிகத் தெளிவாக விரிவாக, உயர்ந்த வகையிலே பணியாற்றி வருவதையும் பற்றி கூறினார்கள். அத்தகைய கருத்துக்களில் நானும் பங்குக்கொள்ள விரும்புகிறேன். நம் மாகாண மின்சார அபிவிருத்தியைப் பற்றி புகழ்ச்சியோடு பேசுவதானால் எத்தனை மணி வேண்டுமானாலும் பேசலாம். காரணம் குறித்த காலத்திலேயே ஏன் குறித்த காலத்திற்கு முன்னரே கூட, குறைந்த செலவில் திட்டங்களை முடிக்கக்கூடிய திறமை மின்சார இலாகாவிற்கு இருக்கிறது என்றால் உண்மையிலேயே அது போற்றத்தக்கது என்றுதான் சொல்லவேண்டும். குறிப்பாக பெரியாறு திட்டத்தை எடுத்துக்கொண்டால் ஒரு கோடி ரூபாய் மிச்சப் படுத்திக் கொடுத்திருக்கிறார்கள். குறித்த காலத்திற்கு முன்னரே முடித்தும் இருக்கிறார்கள். இது போன்று குந்தாத் திட்டத்திலும் அன்னிய உதவி பெற்று பாராட்டுதலைப் பெற்றிருப்பதால் மேலும் உதவி செய்ய முன்வந்திருக்கிறார்கள். கனடா உதவி, ரஷ்யா உதவி இதெல்லாம் நமக்கு மின்சாரத்துறையில் கிடைக்கிறது என்றால் இந்த இலாகாவின் திறமை என்பதை மறுக்க முடியாது. அந்த அளவுக்குக் காரணமாக உள்ள மின்சார இலாகா சிப்பந்திகளுக்கு நம் சட்ட சபை ஆதரவையும் ஊக்கத்தையும் அளித்தால்தான் மேன்மேலும் அவர்கள் ஊக்கத்தோடு இந்தப் பணியில் ஈடுபடுவார்கள்.

இத்தனை முன்னேற்றம் இருந்தாலும் (வருஷத்திற்கு) ஒரு முறை வெட்டு வெட்டு என்று வருகிறதே அதை சமாளிக்க என்ன வழி என்று பார்க்க வேண்டும். திடீரென்று மின்சார வெட்டு

18th August 1961] [Srimathi T. N. Anandanayaki]

வந்தவுடனே பல தொழில்கள் பாதிக்கப்படுகின்றன. உற்பத்தி பாதிக்கப்படுகிறது. சிமெண்டை எடுத்துக்கொண்டால் சிமெண்டை வாங்கிக்கொள்ளுங்கள், சிமெண்டை வாங்கிக் கொள்ளுங்கள் என்று சொன்னது போக இப்போது சிமெண்டே கிடைக்காமல் கஷ்டப்படுகிறோம். மின்சார வெட்டினால் உற்பத்தி குறைகிறது. சந்தைக்கடையில் சரக்கு கிடைப்பது கஷ்டமாக விடுகிறது, விலை ஏறி விடுகிறது. இப்படிப்பட்ட நிலைமையைச் சமாளிக்க, வெட்டு இல்லாமல் இருக்க என்ன வழி என்று கண்டு பிடித்தால் வரவேற்கத்தக்கதாக இருக்கும், பொருளாதாரம் பாதிக்கப்படாமல் இருக்கும் என்று எண்ணுகிறேன்.

(நான் குறைவாக பேசவில்லை) ஆகவே மின்சார இலாகாவினர் இதற்குத் தக்க நடவடிக்கை எடுத்துக்கொண்டு வெட்டு இல்லாத ஒரு வருஷத்தை இனி வரும் வருஷமாவது தர முடியுமா என்பதற்கான வழிகளைக் கண்டுபிடித்தால் மிகவும் சிறந்ததாக இருக்கும்.

ஒவ்வொரு ஐந்தாண்டு திட்டத்திலும் அதிகமாக மின்சாரத் திற்கு செலவழித்துக்கொண்டே வருகிறோம். மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்தில் 100 கோடி ரூபாய் மின்சாரத்திற்காக அரசாங்கம் ஒதுக்கி இருப்பதற்கு பாராட்ட வேண்டும். இந்த 100 கோடி ரூபாயிக்கு மேலேயும் செலவழிக்கக்கூடிய அளவில் இந்த இலாகாவினர் வேலை செய்வார்கள் என்பதில் சந்தேகமே கிடையாது. அதேபோன்று இந்த இலாகாவினர் கிராமங் களுக்கும் அதிகமான அளவில் மின்சாரத்தை விஸ்தரித்திருக் கின்றனர். இப்போது இதுவரை 11,000 கிராமங்களுக்கு கிடைத் திருக்கின்ற இந்த வசதி, இன்னும் பல்லாயிரக்கணக்கான கிராமங்களுக்கு கிடைக்க இருப்பது மிகவும் சிறந்ததாகும். இந்தத்துறையில் இந்தியாவிற்கே சென்னை வழிகாட்டியாக இருப்பது பாராட்டத்தக்கதாகும். 1 p.m.

உணவு உற்பத்திக்கு நாம் எவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கிறோமோ அதேபோல் தொழில் அபிவிருத்திக்கும் நாம் முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமென்று சொல்ல விரும்புகிறேன். பல தொழில்கள் ஆரம்பிக்கப்பட வேண்டுமென்று இருந்தாலும்கூட இந்த மின்சார இலாகாவிலே மின்சார விஸ்தரிப்புக்கான லைசென்ஸ் பெறுவதில் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது என்று ஒருசில தொழில் அதிபர்கள் மூலம் தெரியவருகிறது. இன்னும் சில தொழிற்சாலைகளில் 'ஷிப்டு' முறை கையாளப்பட்டு வருகிறது. அம்மாதிரி தொழிற்சாலைகளுக்கு இந்த வெட்டு இல்லாமலோ அல்லது இன்னும் அதிகப்படியான அளவில் மின்சாரமோ கிடைத் தால் இன்னும் ஒரு அதிகப்படியான ஷிப்டை ஏற்படுத்திக்கொள்ள முடியும். இன்னும் ஒரு சிலர் மின்சார இலாகாவிற்குத் தெரியாம லேயே, மின்சாரத்தை அதிகப்படியாக பயன்படுத்திக்கொண்டு தான் வருகிறார்கள். மின்சார வெட்டும், அதிலுள்ள நெருக் கடியுமேதான் இதற்குக் காரணம் என்று சொல்லுகிறார்கள். அதற் காக பயந்து என்ன செய்கிறார்கள் என்றால், மின்சார இலாகா சிப்பந்தி அங்கு போகும் நேரத்தில் தொழிலாளர்களை வீட்டுக்குப்

போகும்படி சொல்லிவிட்டு, பிறகு சிப்பந்தி சென்றவுடன் வழக்கப்படி இலாகாவினருக்குத் தெரியாமல் மின்சாரத்தை அதிகப்படியாக உபயோகித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். இப்படி ஒரு சட்டம் இருப்பதைக் காட்டிலும் நாமே இந்த நெருக்கடியைத் தீர்த்து அவர்களுக்கு உதவக்கூடிய வகையில் மின்சார சப்ளையை விஸ்தரித்தால், தொழில் அபிவிருத்தியும் ஏற்படும். அதனால் உற்பத்தியும் பெருகும். ஜனத்தொகை பெருகியுள்ள இந்த நேரத்தில் பலருக்கு வேலை வாய்ப்பும் அதிகரிக்கும். தொழிற்சாலை முன்னேற்றத்திற்கான இத்தகைய சிறு சிறு சங்கடங்களையெல்லாங்கூட, இந்த போர்டார் தீர்த்து வைப்பதில் கவனம் செலுத்தினால் மிகவும் சிறப்பாக இருக்கும்.

அடுத்து இந்த தனியார் துறையினர் லைசன்ஸ் பெற்று நடத்திக் கொண்டு வருவதை பற்றி இந்தச்சபையில் பல அங்கத்தினர்கள் கடந்த 4 வருஷங்களாக பேசிக்கொண்டு வருகிறார்கள். மொத்தம் 8 தனிப்பட்ட லைசன்ஸ்தாரர்கள் இருக்கிறார்கள். இதில் 5 பேர் முனிசிபாலிடியினர். இந்த 8 பேர்களையும் போர்டார் எடுத்துக் கொண்டு, இன்னும் ஏன் தேசிய மயமாக்காமல் இருக்கிறார்கள் என்று எங்களுக்குத் தெரியவில்லை. இந்த 8 பேர்களை தேசிய மயமாக்குவது போர்டாருக்கு ஒரு பெரிய காரியமல்ல. மிகவும் சுலபமாகும். போர்டாரும் இப்போது அதிகமாக பணம் வருகிறது என்று சொல்கிறார்கள். இவர்கள் நீக்கினால்தான், அந்தப் பகுதியைச் சேர்ந்த கிராமங்களுக்கு இன்னும் அதிகப்படியான அளவுக்கு மின்சார விஸ்தரிப்பு செய்யமுடியும் என்று சொல்லப்படுகிறது. காரணம், இதன் சொந்தக்காரர்களை மின்சார விஸ்தரிப்பு செய்யும்படி சொன்னால், நாங்கள் போட்டால் எந்த நேரத்திலும் போர்டார் இதை எடுத்துக்கொள்ளலாம், அப்படி எடுத்துக் கொள்ளும்போது எங்களுக்கு அதனால் நஷ்டம்தான் ஏற்படுமென்று அஞ்சுகிறார்கள். அப்படி போடுவதாக இருந்தால், சர்க்கார் கடன் கொடுப்பதாக இருந்தால், கடனை வாங்கி வேண்டுமானால் வசதி செய்து கொடுக்கிறோம் என்று சொல்கிறார்கள். இப்படி அவர்களுக்கு கடன் கொடுத்து உதவுவதைக் காட்டிலும், இந்த 8 தனிபட்ட பேர்களுக்கும் மேலும் பர்மிஷன் கொடுக்காமல் போர்டாரே உடனடியாக எடுத்துக்கொள்வது நல்லது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இந்த தனிப்பட்டோர், போர்டார் எங்கு வேண்டுமானாலும் மின்சாரத்தை விஸ்தரித்துக் கொள்வதற்கு அனுமதி தருகிறார்கள். இப்படி அவர்கள் அனுமதி அளித்தாலும்கூட, அவர்களை இன்னும் தேசிய மயமாக்காமல் விட்டு வைப்பதில் பிரயோஜனமில்லை. போர்டாரே மொத்தத்தையும் ஏற்றுக்கொண்டால், தனிப்பட்டோருக்கு கடன் கொடுத்துதவ வேண்டிய அவசியமும் ஏற்பட்டது. அதனால் காலதாமதமும் ஏற்படாது. இன்னும் பல கிராமங்களுக்கு துரிதமாக மின்சாரத்தை விஸ்தரிக்க முடியும். ஆகவே, இனி வரும் வருஷமாவது இந்த 8 லைசன்ஸ்தாரர்களையும் நீக்கி, அவைகளையெல்லாம் தேசிய மயமாக்கும் முறையில் இந்த அறிக்கையை போர்டார் தயாரிக்கும்படி செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

18th August 1961] [Srimathi T. N. Anandanayaki]

மின்சாரத்தை விருத்தி செய்வதற்கான உபகரணங்களை நாம் இப்போது, உற்பத்தியாக்கவில்லை. ஆகவே அதற்கான உப தொழில்கள் ஏற்படுவதற்கான சலுகைகள் கொடுததாவது, அதற்கான தொழிற்சாலைகள் ஏற்படுத்த வேண்டும். அதற்கு எந்தெந்த முறைகளில் சலுகைகள் கொடுக்கலாம் என்பதை போர்டார் யோசிக்க வேண்டும். இப்போது கேபிள்ஸ், இன்சுலேட்டர்கள் தான் செய்வதற்கு ஆரம்பித்திருக்கிறார்கள். இதற்கு முன்பு பல அங்கத்தினர்கள் சொல்லியபடி சிமெண்ட் கிடைக்காத காரணத்தினால் போஸ்டுகள்கூட கிடைப்பதற்கு கடினமாக இருக்கும். ஆகவே, இதிலேயெல்லாம் கவனம் செலுத்தி, கிராமங்களுக்கு இன்னும் சீக்கிரமாக நன்மை கிடைக்க என்னென்ன முயற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டுமோ, அவைகளை யெல்லாம் செய்து முடிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அதே போல தனியார் துறையில் மின்சார உற்பத்தி செய்ய முடியுமா என்று வட சென்னையிலே உள்ள தனிப்பட்ட முதலாளிகள் தங்களுடைய தொழிற்சாலைகளுக்காக தனியாக ஒரு தெர்மல் ஸ்டேஷன் போட இருப்பதாக கேள்விப் பட்டோம். இப்படி தனிப்பட்ட முறையிலே தெர்மல் ஸ்டேஷன் ஏற்படுத்திக் கொண்டு, வெட்டு முதலிய தொந்தரவுகள் இல்லாமல், தொழில் துறை சுமூகமாக தங்கு தடையின்றி நடப்பதற்கு நாமும் அவர்களுக்கு உதவி செய்ய வேண்டும். ஆகவே இதிலேயும் கவனம் செலுத்தி தொழில் துறையிலே அவர்கள் மின்சாரத்தைப் பயன் படுத்திக் கொள்வதற்கான ஒரு சூழ்நிலையை நாம் ஏற்படுத்திக் கொடுப்பது மிகவும் வரவேற்கத் தக்கதாகும்.

இவ்வளவையும் செய்த நாம், இந்த எலக்டிரிசிடி போர்டையும் சிறிது கவனிக்க வேண்டும். இதிலே பூராவும் அதிகாரிகள்தான் இருக்கிறார்கள். இந்த போர்டிலே 4 சட்ட சபை அங்கத்தினர்கள், அல்லது 2 எம்.எல்.ஸி.-க்கள் போட்டால்தான் இன்னும் இந்த போர்டு நல்ல முறையிலே செயல்படுவதற்கு முடியும். இப்படிப் பட்ட போர்டிலே இப்படிப்பட்ட நான்-அபிஷியல்ஸ்கள் இருந்தால்தான் பொது மக்களுடைய நன்மையில் அக்கறை செலுத்த முடியும். ஆபீசர்களால் இந்த வகையில் அக்கறை செலுத்த முடியாது என்பதில் சந்தேகமே இருக்க முடியாது. தாராள பென்ஷன் ஸ்கீமை அவர்களால் இன்னும் அமுல் நடத்த முடியவில்லை. அதேபோல் ஜூனியர் எஞ்சினியர், அஸிஸ்டென்ட் எஞ்சினியர் ஆகியோருடைய சம்பள விகிதங்களை இன்னும் திருத்தியமைக்கவில்லை. அதிலும் தாமதப்படுத்தப்படுகிறது. அதே சமயத்தில் அந்த போர்டில் இப்படிப்பட்ட நான்-அபிஷியல்கள் இருந்தால், அவர்களுக்கு பொதுமக்களிடத்தில் போய் நாம் ஓட்டு வாங்க வேண்டுமே, அவர்களுக்கான சலுகைகளை நாம் செய்ய வேண்டுமே, அவர்களுடைய மனத்தாங்கலை நாம் ஏற்படுத்திக் கொள்ள முடியாதே என்று கவலைப்பட்டு, அவசர அவசியங்களை அனுசரித்து காரியங்களை துரிதமாகச் செய்வதற்கு முடியும். ஆகவே இந்த போர்டில் நான்-அபிஷியல்களைப் போட்டால்தான் இலாகா சிப்பந்திகளுக்கு நன்மை செய்ய முடியும். ஆகவே,

[Srimathi T. N. Anandanayaki] [18th August 1961

மின்சார இலாகா அமைச்சர் அவர்கள் இதை நன்கு யோசித்துப் பார்த்து நான்-அபிஷியல்களை போட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இந்த முறை வரவேற்கத்தக்கதாகவும் இருக்கும்.

தாராள பென்ஷன் முறையைப் பற்றி எடுத்துக்கொண்டால், இந்தக் காலத்தில் பென்ஷன் வாங்கிக் கொண்டு காலம தள்ளுவதே ஒருவரால் மிகவும் கஷ்டம். இந்த நிலையில் பென்ஷன் முடிவு செயயப்படாமல், தாராள பென்ஷன் முறை வரப் போகிறது, அதுவரை காத்திருங்கள் என்று சொன்னால், அவர்கள் படும் கஷ்டத்தை மக்களின் பிரதிநிதிகளால்தான் உணர முடியுமே தவிர, அதிகாரிகளால் உணர முடியாது. அதிகாரிகள் இந்தத் தனிப்பட்டவர்களது பென்ஷனால் அவரது குடும்பமே பாதிக்கப் படுகிறது என்பதை உணர்ந்து செயல்படுவதற்கு முடியாது. அவர்கள் இதை இலாகாவின் பிரச்னையாகத்தான் கருதுவார்களே தவிர, மனிதர்களின் பிரச்னையாகக் கருதிச் செயல்பட முடியாது. ஆகவே இந்தப் பிரச்னையை அந்த முறையில் கருதி இன்னு தாமதப்படுத்தாமல், தனிப்பட்ட மனிதர்களின் பிரச்னை யாகக்கருதி, அவர்களது கஷ்டத்தை, வேதனையை, உணர்ந்து இந்த தாராள பென்ஷன் முறையை சீக்கிரமே, உடனடியாக அமுல் நடத்த வேண்டுமென்று போர்டாரை கேட்டுக் கொள்கிறேன்.

அதே போன்று இதிலே வேலை செய்யக்கூடிய ஜூனியர் எஞ்சினியர்கள், அசிஸ்டன்ட் எஞ்சினியர்கள் ஆகியோரின் பிரச்னையையும் கவனிக்க வேண்டும். இதிலே ஏதோ சங்கடம் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. அது என்ன சங்கடம் என்று பார்த்தால், லேபர் டிஸ்பியூட் ஆக்ட் படி நடவடிக்கை எடுத்து, இதுபற்றிய முடிவைச் செயயும்படி லேபர் கமிஷனருக்கு அனுப்பப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இதற்குக் காரணம் இவர்கள் 500 ரூபாய்க்கும் குறைவாக சம்பளம் வாங்கப் படுபவர்களின் பட்டியலிலே சேர்ந்து இருப்பதாகும். இவ்வாறு இவர்களைச் சேர்த்திருப்பது சரியல்ல. 1958-59 வருஷம் முதல் இப்பிரச்னை பொதுப் பிரச்னையாக நீடித்து கொண்டு வருகிறது. இதிலே இந்த ஜூனியர் எஞ்சினியர்களையும், அசிஸ்டென்ட் எஞ்சி னியர்களையும் சேர்க்கக்கூடாது. அவர்களுக்குத் தனிப்பட்ட சலுகை கொடுத்து, லேபர் டிஸ்பியூட் ஆக்ட்டில் அவர்களை சேர்க் காமல் தனியாக நடவடிக்கை எடுததுக்கொள்ள வேண்டும். சட்டப்படி 500 ரூபாய்க்கு குறைவாக சம்பளம் வாங்கினால் லேபர் டிஸ்பியூட் ஆக்ட்டில் சேர்க்கப்பட வேண்டுமென்று இருந்தாலும் அதை சேர்க்காமல் இருப்பதற்கான திருத்தங்களை ஏற்படுத்த வேண்டும். இந்த ஜூனியர் என்ஜினியர்கள், அசிஸ்டன்ட் என்ஜி னியர்களின் சம்பள விகிதம் ஏற்கனவே 1960-ல் ரிவைஸ்ட் செய்யப்பட்டு 1961-ல் அமுலுக்கு கொண்டு வரப்பட்டது. அப்படி கொண்டு வந்ததற்கு இன்னும் முடிவு கட்டாமல், ஒரு சங்கடமான நிலையை ஏற்படுத்துவது என்றால், இதில் வேலை செய்யக்கூடிய சிப்பந்திகள் தங்கள் வேலை களில் எப்படி ஆர்வத்தையும், ஊக்கத்தையும் காட்ட முடியும்?

18th August 1961] [Srimathi T. N. Anandanayaki]

இதை மின்சார போர்டார் யோசித்து பார்க்கவேண்டும். நாம் மேலும் மேலும் ஐந்தாண்டுத் திட்டங்களை போட்டு, வேலை செய்துகொண்டு வருகிறோம். இதிலே அவர்கள் உற்சாகமாக வேலை செய்ய வேண்டுமென்றால், போர்டார் இந்த மாதிரி விஷயங்களில் சற்று தனிப்பட்ட கவனம் செலுத்தி, எவ்வளவு சீக்கிரம் இவர்களுடைய பிரச்னையை தீர்த்து வைக்க முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் தீர்த்து வைக்க வேண்டும். அப்போதுதான் அதிலே வேலை செய்யக்கூடிய சிப்பந்திகள் சந்தோஷமாக இருப்பார்கள். இக்காரியத்தை 1962-ல் தேர்தல் நடப்பதற்கு முன்பு செய்து முடித்தால் வரவேற்கக் கூடியதாக இருக்கும். இல்லாவிட்டால் இதை எதிர்க் கட்சியினர் தங்களுக்குச் சாதகமாக பயன்படுத்திக் கொள்வார்கள். இதையெல்லாம் போர்டார் நன்கு சிந்தித்துப் பார்த்து, இந்த சிக்கல்களை எல்லாம் சுமுகமான முறையில் தீர்த்து வைக்க வேண்டும். சர்க்காரின் ரிவைஸ்ட் ஸ்கேலை அமுல் நடத்துவதில் இனிமேலும் காலதாமதம் செய்வது சரியல்ல.

மின்சார இலாகா மிகத் திறமையாக வேலை செய்து, நம்முடைய மாகாணத்திற்கு நல்ல பெயரும், கீர்த்தியும் வாங்கிக் கொடுத்திருப்பது குறித்து நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். அதே போன்று மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு ஒதுக்கியுள்ள 100 கோடி ரூபாயையும் குறுகிய காலத்திற்குள் செலவழித்து நல்ல முறையில் வேலை செய்யுமென்பதில் சந்தேகமே இல்லை. அதே சமயத்தில் போர்டுக்கு சற்று வருமானமும் அதிகரித்து இருக்கிறது என்று சொல்வதைப் பார்க்கும்போது, மிகவும் மகிழ்ச்சியடைய வேண்டியிருக்கிறது.

அதே சமயத்தில் போர்டார் மின்சாரத்தை உபயோகிப்பதில் மக்களுக்கு அளிக்கும் சலுகைகளையும் நாம் சற்று கவனிக்க வேண்டும். விவசாயிகளுக்கு நிறைய சலுகை கொடுத்திருக்கிறோம். அதேமாதிரி நகர மக்களுக்கும் கொஞ்சம் சலுகை கொடுக்க வேண்டும். எலக்டிரிஸிடி யில் அதிகமாக போய் கொண்டே இருக்கிறது. சற்று அதைக் குறைத்துக் கொடுக்க முடியுமேயானால் அதை வரவேற்பார்கள். போர்டிற்கு நஷ்டம் வரக்கூடாது. லாபத்தில்தான் நடக்க வேண்டுமென்பது அவசியம் இல்லை. கமர்ஷியல் லைனிலேயே நடத்திக்கொண்டு போகவேண்டுமென்பது கிடையாது. நஷ்டம் இல்லாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். நஷ்டமில்லாமல் சார்ஜஸை குறைக்க முடியுமானால் நகர மக்கள் அதை ரொம்பவும் வரவேற்பார்கள். இந்த மின்சார இலாகா ஆண்டு அபிவிருத்தி அறிக்கையை மனப்பூர்வமாக ஆதரித்து, இந்த இலாகா மேலும் மேலும் ஊக்கத்தோடு இயங்கி, பலனுள்ள திட்டங்களை உருவாக்கித் தரவேண்டுமென்று சொல்லி, என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER: The House will now adjourn and meet again at 8-30 a.m. to-moorrow.

The House then adjourned.